# கல்கி

KALKI 11.3.90 ரூ. 2.50



ஆட்சியில் நூறு நாட்கள்

# இப்போது, விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.

இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| | |
|---|---|
| பேக் | 100 கிராம் விலை |
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |




உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கன லாபம் கிடைக்கிறது. இதில் உங்களுக்கு ஒரு துளியளவு விம் உபயோகமோங்கும் நுரை கொழித்து பிசுக்குகளை விசுக்க என வெளியேற்றுகிறது கணங்களுக்காக... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமிலுக்க.

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS VG 482 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.



# 'அசடு' நீக்கினால் சமர்த்துப் பிள்ளை!

●● ஓரிரு இலை வந்த, அல்லது அடிப் பாகம் பெருத்த காக்கு மூக்குத் தென்னம் பிள்ளைகளே நடவுக்குச் சிறந்தவை. சிரமமின்றிப் பிழைத்து இவை தழைக்கும். பலனுக்கு வரச் சராசரி ஐந்து வருடங்களும் நிலையான தேங்காய் கிடைக்கப் பத்து வருடங்களும் ஆகும்.

●● தென்னம்பிள்ளைகளுக்குக் குறையின்றித் தண்ணீர் ஊற்றினாலும், குழியின் மேல்பாகம் சுமார் ஓர் அங்குலம் வரை, மணல் வறுத்து எடுத்தது போன்று தென்படும். இந்த மணல் தொட்டுக் கொண்டிருக்கும் தென்னம்பிள்ளையின் பகுதி நெருப்புக் கட்டையால் சுட்டது போல் வெந்துவிடும். இதனைச் 'சுடுமண் சுட்டுள்ளது' என்று கூறுவர்.

●● தென்னம்பிள்ளையில் குருத்து வாடும் அறிகுறி தென்பட்ட உடனேயே சுடுமண் சுட்டுள்ளதா என்று அகழ்ந்து பார்த்து, மணலை அப்புறப்படுத்தி, வண்டல் மண் அல்லது செம்மண்ணைப் போட்டுத் தண்ணீர் ஊற்றி, நன்கு கரைத்து விடவும். வண்டல் மண் ஈரத்தைச் சீக்கிரம் விட்டு விடாது; அதன் பசபசப்பு பிள்ளையைச் சுட்டு விடாமல் பாதுகாக்கும்.

●● ஆற்று மணல் நான்கு பங்கு, செம்மண் இரண்டு பங்கு, மக்கிய சாணி எரு ஒரு பங்கு ஆகியவற்றின் கலவையோடு, BHC பத்து சதவிகித பவுடரையும் கலந்து, பிள்ளை நடவிருக்கும் குழியில் 2/3 பாகம் நிரவி நட்டால் நல்லது. செம்மண் கிடைக்காவிட்டால் படுகை மண் அல்லது வண்டல் மண் பயன்படுத்தலாம்.

●● கோடையில் ஒரு நாள் விட்டு ஒரு நாள் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். சுமார் ஐந்தாறு இலைகள் வந்த பிறகு வாரம் ஓரிரு முறை பாய்ச்சலாம். டியூப் வழியாகத் தண்ணீர் பாய்ச்சும் போது நேரடியாகப் பிள்ளையைத் தாக்காதவாறு பாய்ச்ச வேண்டும்.

●● சோற்றுக் கற்றாழையைக் குழியில் நடுவதன் மூலம் நீர் ஆவியாவதையும், சூரிய ஒளி நேரடியாகப் பிள்ளையைத் தாக்குவதையும் தடுக்கலாம்.

●● வீட்டுத் தோட்டத்தில் தென்னை நடும் போது கட்டடச் சுவரிலிருந்து ஐந்தடி இடைவெளி விட்டு நட்டால் போதுமானது.

●● தென்னை மரத்தின் பாளை, பன்னாடை, கூராஞ்சி போன்றவற்றை எடுத்து விடுவதற்கு, 'அசடு பார்த்தல்,' 'சுத்தம் செய்தல்,' 'சிரை எடுத்தல்' என்று பலவிதமாகச் சொல்வார்கள். அனுபவம் உள்ள மரமேறிகளைக் கொண்டு 'அசடு பார்க்கச்' செய்ய வேண்டும். கை வைத்த உடனேயே வரக்கூடிய மடித்துப் போன பன்னாடைகளை எடுத்து விட வேண்டும். மரம் வெள்ளை தெரிகிற அளவுக்குப் பன்னாடைகளைக் கிழித்து எடுக்கக் கூடாது.

●● தேங்காய் வெட்டும் போது காய்களை மட்டும் பறிக்காமல் குலையோடு வெட்டி விட வேண்டும்.

●● பறித்த காய்களை உரித்து வைப்பதானால் சிறிதளவேனும் நார் வைத்து உரித்தால் சுமார் ஒரு மாதம் ஆனாலும் கெடாது. முற்றிலும் உரித்த காய்களைக் கண் பாகம் மேல்நோக்கி இருக்கும்படி அடுக்கி வைத்தால் ஒரு மாதம் வரை அழுகாது.

●● உடைத்த தேங்காய் மூடியை அடுப்பில் காட்டிச் சிறிது சூடாக்கி வைத்திருந்தால் மூன்று – நான்கு நாட்கள் வரை அழுகி வீணாகாமல் இருக்கும்.

**வா. செ. செல்வம்** எழுதிய **செல்வம் தரும் தென்னை, வளம் தரும் தென்னை** ஆகிய நூல்களிலிருந்து தொகுப்பு.

(தமிழ்நாடு தென்னை வளர்ச்சிக் கழகம், திருவையாறு – 613 204.)



# மிருகய

சும்மா சொல்லக் கூடாது. மம்முட்டிக்கு இவ்வளவு மவுசு என்றால் அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. மனிதர் அசத்தி விடுகிறார்.

அல்சேஷனைக் கையில் பிடித்துக் கொண்டு ஆற்றின் குறுக்கே நீந்திக் கடந்து வந்து கிராமத்தில் அறிமுகம் ஆகும் பாங்கில் ஆகட்டும் —

ஆற்றங்கரையில் குளியலில் ஈடுபட்டிருக்கும் இளம் பெண்களை அலட்சியமாகப் பார்த்து, அந்த அலட்சியத்தினூடேயே தன் ஆர்வப் பெருக்கையும், மெல்லிய திரையாகப் படரவிடுவதிலாகட்டும் —

அப்பாவியும் முரடனுமான ஒரு வித்தியாசக் கலவையாக, அசட்டுச் சிரிப்புச் சிரித்து, புரிந்து கொள்ள இயலாதவரைப் போலப் பேசி, சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் எதிராளியை (சமயங்களில் பன்மை) புரட்டியெடுத்துத் துவம்சம் செய்வதிலாகட்டும் —

எதிர்பாராத விதமாக ஒருவனுடைய மரணத்துக்குக் காரணமாகி, அதுவே மனத்தைக் குத்திக் கிளற, அதன் விளைவாக அடங்கி ஒடுங்கிப் போகிறவராக மாறி, அதற்குப் பின் நடைபெறும் அவருக்குச் சம்பந்தமில்லாத குற்றங்களுக்கெல்லாம் அவர் மேலேயே பழி விழ, தான் நிரபராதி என்று நிரூபணம் செய்ய முடியாமல் தத்தளித்துத் தவிப்பதிலாகட்டும் —

இப்படிச் சொல்லிக் கொண்டே போகக் கூடிய அவருடைய வெற்றிகளுக்கு அஸ்திவாரமாக விளங்குவது தொய்வில்லாமல் கற்பனை வளத்தோடு தொகுக்கப்பட்டுள்ள திரைக்கதை அமைப்பு.

ஒரு கிராமத்தில் தொல்லை தரும் புலி. அதனைக் கொல்வதற்காக வரவழைக்கப்படும் முரடன். அதன் விளைவாகக் கிராமத்தில் நிகழும் சம்பவங்கள். முடிவில் புலியின் மரணம்.

இந்த நாலுவரி ஆதார கருத்தியை வைத்துக் கொண்டு ஒரு கிராமத்து மக்களின் வாழ்க்கைப் போக்கில் ஒரு தனி மனிதனின் வரவு எப்படியெல்லாம் கொந்தளிப்பை ஏற்படுத்துகிறது என்பதை மூன்று மணி நேரம் விஸ்தாரமாக, அதே நேரத்தில் ஆழமாக ஆலாபனை செய்ய முடிந்திருக்கிறது.

நுணுக்கமான, உணர்ச்சிக் கொந்தளிப்பான பாத்திரங்கள். அவர்கள் மத்தியில், கிராமிய மக்களைச் சமனப்படுத்தி, ஆலோசனைகள் வழங்கி, அவர்களுடைய சுகதுக்கங்களில் அவ்வப்போது பங்கேற்று, அவர்களைப் பெற்றெடுக்காத தந்தையாக உலவி வரும் பாதிரியார் மற்றொரு ஓகோ.

குறிப்பிட வேண்டிய மூன்றாவது நபர், "என்னைப் பாக்யம்னும் அழைக்கலாம். லட்சுமி என்றும் கூப்பிடலாம்" என்று மம்முட்டியிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் கிராமத்து இளம்.சிட்டு பாக்ய லட்சுமி. (அசல் பெயர் தெரியவில்லை. வித்யா?)

தன் தாயைக் கொன்றுவிட்ட புலியை அவர் கொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்வதற்காக மம்முட்டியைச் சந்தித்து, அந்தச் சந்திப்பே காதலாக மாறி, பின்னர் அந்தக் காதல் நிறைவேறாமல் போய்ப் பழி வாங்கும் உணர்வுடன் அந்தக் காதலன் மணக்கவிருக்கும் பெண்ணிடமே அவள் சகோதரனைக் கொன்றது அவள் மணக்க விருப்பவன்தான் என்று வெளிப்படுத்தும் கட்டத்தில் —

காதலனை இழந்துவிட்ட துக்கம், அதற்காகப் பழிவாங்கும் நிறைவில் பெருகும் மகிழ்ச்சி... இப்படி இருவேறு உணர்ச்சிகள். கண்களின் மூலம் துக்கத்தின் விளிம்பையும் மகிழ்ச்சியின் எல்லையையும் ஒரே நேரத்தில் தொட்டுக் காண்பிக்க முடியுமா? முடியும். செய்து காட்டியிருக்கிறார்.

யதார்த்தமான நிகழ்ச்சிகள். இயல்பான நடிப்பு. எளிமையான — விகல்பமில்லாத வசனங்கள். என்றாலும், ஒன்றிரண்டு இடங்களில் செயற்கையான சினிமாத்தனங்கள். தேவைதானா? — 1.

செக்ஸுக்காக அங்கங்கே கொஞ்சமாக, ஊறுகாயைப் போலப் பயன்படுத்தப்படும் வைஷ்ணவி. அவருக்கும் சரி, கதைக்கும் சரி, தேவைதானா? — 2.

படம் முழுதும் கேரளத்துக்கே உரிய பச்சைப் பசேலும் கட்டினமையும்...

கலக்கி, கேட்டோ. வளர நன்னாயி!

— சி. ஆர். கே.

# கணக்கிலும் கவிதை கண்டவர்

மகாகவி பாரதியாரைக் கணக்குக் கற்கச் சொன்னபோது அவரது கவிதை மனம், 'கணக்கு பிணக்கு ஆமணக்கு' என்று எதுகைச் சொற்களை அடுக்கிச் சென்றதாம்! கலையிலும் இலக்கியத்திலும் காதல் கொண்டவருக்கு, கணக்கு வேம்பைக் காட்டிலும் கசப்பதாக இருப்பதுண்டு.

மாறாகக் கணக்கை விரும்பி, அதைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து வெற்றி பெற்ற கவிஞர் ஒருவர், என் எழுத்துலகக் குருநாதர், குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா.

வள்ளியப்பா எனக்கு அறிமுகமான போது அவர் சென்னைக் கடற்கரைச் சாலையில் உள்ள இந்தியன் வங்கியில் அந்நியச் செலாவணிப் பிரிவில் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

நான் செல்லும் போதெல்லாம், அவரது மேஜை அளவு விரிந்து பரந்திருக்கும் கணக்கு நோட்டில், தொகைகளைக் கூட்டிப் பார்த்துக் கொண்டிருப்பார். வலக்கையில் உள்ள பென்சிலின் முனை, எண்களை ஒவ்வொன்றாகத் தொட்டபடி கீழிறங்கி வர, அவருடைய உதடுகள் மிக மெதுவாக அசைந்து கொண்டிருக்கும். அவர் முன் நான் சென்று நிற்பேன். ஒரு வினாடி அவரது பென்சிலின் பயணம் நிற்கும். அவர் ஏறிட்டுப் பார்ப்பார். "வா, பூவண்ணன் உட்கார்" என்பார். உடனே பென்சில் எண்களைத் தொட்டுச் செல்வதைத் தொடரும்.

நான் அவர் எதிரே அமர்வேன். 'ஆயிரம், பத்தாயிரம் என்று பெரிய பெரிய தொகைகளைக் கூட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் போது கவிஞருடன் பேசலாமா? நமது பேச்சால் அவரது கணக்கில் தவறு நேர்ந்து விட்டால் என்ன செய்வது?' நான் தயங்குவேன்.

கவிஞரின் பென்சில் மீண்டும் சற்று நிற்கும். "இந்த இதழ் பாலர் மலரைப் பார்த்தாயா?" என்று கேட்பார். கேட்டு முடித்ததும் பென்சில் பயணம் தொடரும். கவிஞரின் பார்வை, கணக்கு நோட்டிலே படிந்திருக்கக் காதுகள் நான் சொன்னவற்றைக் கேட்கும். மீண்டும் அவர் ஏதோ கேள்வி கேட்பார். நான் பதில் சொல்வேன். அவர் எண்களைக் கூட்டித் தொகையை எழுதிய படியே என் பேச்சைக் கேட்பார்.

ஒரு சமயம், கவிஞர் அருகே அமர்ந்து பணிபுரிபவரிடம், "கவிஞர் என்னிடம் பேசிக் கொண்டே கூட்டித் தொகை எழுதுகிறாரே, அதில் தவறு நேர்ந்துவிடாதா?" என்று கேட்டேன்.

நான் கேட்டதும் அவர் சிரித்தார். "தவறா! வள்ளியப்பாவின் கூட்டலிலா? நோ! நெவர்! கணக்கிலே அவர் புலி! இந்த வங்கியில் எந்தப் பிரிவில் கூட்டுத் தொகை 'டாலி'யாகாவிட்டாலும் சரி, உடனே 'கூப்பிடு வள்ளியப்பாவை' என்பார்கள். சில நிமிடங்களில் தவறு எங்கே என்று கண்டுபிடித்து விடுவார்." என்று கூறினார்.



எஸ். எஸ். எல். சி. தேர்வை எழுதி முடித்த மறு நாள் வழக்கம் போல் கவிஞரைச் சந்தித்துப் பேசினேன். "பூவண்ணன், உன் எஸ். எஸ். எல். சி. நம்பர் என்ன?" என்று கவிஞர் கேட்டார். நான், "பத்தொன்பதாயிரத்து இருநூற்று ஒன்று" என்று கூறினேன். கவிஞர் அந்த எண்ணை ஒரு முறை சொல்லிப் பார்த்துக் கொண்டார். பிறகு, "ரிசல்ட் வந்தால் பார்க்கலாம் அல்லவா? அதுதான் கேட்டேன்" என்றார்.

"என் எண்ணை எழுதித்தரட்டுங்களா?"— கேட்டேன். கவிஞர் "வேண்டாம். நான் மறக்க மாட்டேன்" என்று கூறினார்.

"தேர்வின் முடிவு முப்பது, நாற்பது நாளுக்குப் பிறகு வெளிவரும். அப்போது என் எண் உங்களுக்கு நினைவிருக்குமா?" என்று கேட்டேன்.

"நினைவிருக்கும். உனது எண் எளிதாக நினைவில் நிற்கும் அருமையான எண். முதலில் 19, அப்புறம் அதற்கு அடுத்த எண்ணான 20. அப்புறம், இந்த இரண்டு எண்களுக்கும் இருக்கும் வித்தியாசமான 1. அதனால் உன் எண் பத்தொன்பது—இருபது—ஒன்று (19201) என்பதை எப்போதும் மறக்க மாட்டேன்," என்று கவிஞர் கூறியதும் நான் வியப்படைந்தேன். எனது எண்ணை மறவாமல் இருக்க இப்படி ஒரு வழியா!

தேர்வின் முடிவு நாளிதழ்களில் வெளிவந்தது. இரண்டு நாள் கழித்து, வெற்றி பெற்ற என்னைப் பாராட்டிக் கவிஞர் எழுதிய கார்டும் வந்தது!

கவிஞர், குழந்தைகளுக்குக் கவிதை எழுதும் போதும் கணக்கை மறக்கவில்லை. அவரது பாடல்கள் பல, கழித்தல், கூட்டல், பெருக்கல் கணக்குகளைக் கவிதையாகவும் புதிராகவும் குழந்தைகளுக்கு சுவாரஸ்யமான விதத்தில் கூறி விடை காண ஊக்குவிக்கின்றன.

கணக்கிலும் கவிதை இருப்பதை உணர்ந்த வள்ளியப்பா, எண்ணில் நிறைந்தவர்! நமது எண்ணத்திலும் நிறைந்தவர்.

—டாக்டர் பூவண்ணன்



## அருள்வாக்கு

தாவரங்களுக்கு உயிர் இருக்கிறது. உணர்ச்சிகள் இருக்கின்றன என்று ஜகதீஷ் சந்திரபோஸ்தான் கண்டுபிடித்தார் என்றில்லை. வனஸ்பதி, அச்வத்தம் என்கிற மாதிரியாக அதுகளையும் உயிரும் உணர்ச்சியும் கொண்டதாகப் பார்த்து மந்திரபூர்வமாக அவற்றுக்கும் நம் பிரத்யுபகாரமாகப் பூஜைகளைப் பண்ண சாஸ்திரம் இருக்கிறது. "தூர்வா ஸூக்தம்" "மருத்திகா ஸூக்தம்" என்றெல்லாம் அருகம்புல், மண் முதலானவற்றிலிருக்கிற தெய்வ சக்தியைக் கூட ஆராதிக்க வேத மந்திரங்கள் இருக்கின்றன. தினமும் செய்கிற "ப்ரஹ்மயக்ஞ"த்தில் சேதன அசேதனங்கள் அத்தனையிலும் இருக்கிற சைதன்ய சக்திக்கு நம் நன்றியறிதலாகத் தர்ப்பணம் சொல்லியிருக்கிறது.

ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டு விட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்தக் காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணி விட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டியில் கட்டி ஸவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்குப் பௌதிகமாகவும், ஆத்மார்த்தமாகவும் பண்ணுகிற உபகாரம் கொஞ்ச நஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்று விட்டு, மநுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம் பிரதி உபகாரம் பண்ணாமல் இருந்தால் பாபம் அல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று" "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் — உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றெல்லாம் மகா பெரியவர் வள்ளுவர், இன்னும் மநு, வியாஸர் எல்லாரும் சொல்கிறார்களே!

மந்த்ரவத்தாகவும், கிராம ஜனங்களின் வழக்கத்தில் வந்துள்ளதுமான அநேக சடங்குகளைப் பண்ணினாலே, அசேதனம் (inanimate) என்று நாம் நினைக்கிறவற்றின் அதி தேவதைகள் திருப்தி அடைந்து விடுகிறார்கள். இது தவிர தாவரங்களுக்கு ஜலம் கொட்ட வேண்டும். மிருகங்களிடம் அன்பு பாராட்ட வேண்டும். அவற்றுக்குக் கொடுமை செய்யவே கூடாது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



# வி.பி.சிங்: பதவியில்

நூறு நாட்களில் ஒரு நிறுவனத்தின் புதிய நிர்வாகியோ, ஒரு நாட்டின் புதிய தலைவனோ எதையாவது பிரமாதமாகச் சாதித்து விடமுடியும் என்று எதிர்பார்ப்பது பொது அறிவுக்கு அவ்வளவு பொருத்தமான விஷயமல்ல. ''நூறு நாட்கள் ஓடிய வெற்றிப் படம்'' என்கிற கதை அல்ல இது.

ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் எதையும் மிகைப்படுத்திக் கூறக் கூடாது. அப்படிச் செய்தால் மக்களது எதிர்பார்ப்பு அதிகமாக இருக்கும். சொல்வது குறைவாகவும் செய்வது அதிகமாகவும் இருக்கும் போதுதான் மக்கள் நம்பத் தொடங்குவார்கள். மக்களது நம்பிக்கையைப் பெறுவதுதான் ஒரு தலைவனுக்கு முதல் லட்சியமாக இருக்க வேண்டும்.

அந்த வகையில் நமது பிரதமர் விஸ்வநாத் பிரதாப் சிங்கைப் பார்த்தோமானால் ''இந்த மனிதரை நம்பலாம். இவரால் முடியும்!'' என்ற நம்பிக்கையை வளர்த்துக் கொண்டிருக்கிறார். மிக முக்கியமான விஷயம் இது.

நூறு நாட்களில் சில அறிகுறிகளை மட்டுமே நாம் காண முடியும். ஒரு மனிதருடைய போக்கை, அவரது மனோபாவத்தை, அவரது அணுகுமுறையை நாம் புரிந்து கொள்ள முடியும். புதிதாக ஒரு மனிதர் பதவி ஏற்றிருக்கிறாரென்றால், அவருக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்க வேண்டும். மாபெரும் தவறுகளை அவர் செய்தால் ஒழிய அவரைத் தாக்குவதோ, கண்டிப்பதோ முறையல்ல.

ஜான் கென்னடி பதவிக்கு வந்த போது அவர் சொன்னார்: ''வெளியில் இருந்த போது எல்லாமே எளிதாகத் தோன்றியது. உள்ளே வந்து பார்க்கும் போதுதான் கஷ்டங்கள், நெருக்கடிகள் புரிகின்றன.'' கென்னடி பதவியைப் புரிந்து கொள்ள — தம் வலிமையையும் பிரச்னைகளின் கனத்தையும் புரிந்து கொள்ள — ஓராண்டிற்கும் மேலாயிற்று.

வி. பி. சிங் அமைச்சராக இருந்து இன்று பிரதமராக ஆகியிருக்கிறார் என்றாலும் இரண்டு பதவிகளுக்கும் இடையே நிறைய வித்தியாசங்கள் உண்டு. புதிய பிரதமருக்குத் தமது அமைச்சர்களின் தராதரங்களை எடை போடவும் யோசனை கூறும் அதிகாரிகளின் ஆற்றல்களை அளக்கவும் நாட்டின் மன ஓட்டத்தையும் உலகப் போக்கையும் புரிந்து கொள்ளவும் அவகாசம் தேவை.

வி. பி. சிங் ஓர் அசாதாரண சூழ்நிலையில் பதவி ஏற்றிருக்கிறார். அமைச்சராயிருந்தவர் வெளியேறிச் சுமார் ஒன்றரை ஆண்டுகளில் பிரதமராகி இருக்கிறார் என்றால் இது ஆதரவு வோட்டு என்பதைவிட ஏற்கெனவே இருந்த ஆட்சிக்கு ஏற்பட்ட எதிர்ப்பின் விளைவு என்பதுதான் உண்மை. (Negative Vote)

நாட்டின் இன்றைய முக்கிய மூன்று பிரச்னைகள்: காஷ்மீர், பஞ்சாப், இலங்கை. இம்மூன்று பிரச்னைகளும் ஒரு வளர்ந்த கட்டத்தில், ''எத்திசையிலும் போகலாம்'' என்கிற நிலையில் இருக்கின்றன.

பஞ்சாபின் தீட்சண்யத்தை வி. பி. சிங் தமது பஞ்சாப் விஜயத்தின் மூலம் குறைத்து விட்டார். ''நல்லது நிகழும், நியாயம் பிறக்கும்'' என்கிற நம்பிக்கைக் கோடு தெரிவதை, சிம்ரன்ஜித்சிங்மான் போன்ற பஞ்சாப் மாநிலத் தலைவர்களது பேச்சிலிருந்து உணர்கிறோம்.

இலங்கைப் பிரச்னையை ஓர் உச்சகட்ட



• பஞ்சாபில் பிரதமர்: நம்பிக்கைக் கோடு தெரிகிறது...



* பொற்கோயிலில் பிரார்த்தனை.

# நூறு நாட்கள்



நிலைக்கு முந்தைய அரசு கொண்டு சென்றிருந்தது. நமது ராணுவப் படை அந்த நாட்டில் தமிழர் நலனைக் காக்கச் சென்றிருந்தது. ஓர் அந்நிய நாட்டில் நமது ராணுவம் செல்வது என்பது சகஜமான விஷயமல்ல. நம் ராணுவத்தின் தினச் செலவு இரண்டு கோடி ரூபாய்; ஆயிரம் போர் வீரர்கள் இதுவரை உயிரிழந்திருக்கிறார்கள். விடுதலைப்புலிகளை ஜனநாயக அரசியலுக்கு இழுக்க முடியவில்லை. இந்திய ராணுவம் வெளியேற வேண்டுமென்ற இலங்கையின் நிர்ப்பந்தம். இடையில் தமிழர்களுக்கு வழங்கப்படுவதாக வாக்களிக்கப்பட்ட உரிமைகள் வழங்கப்படாத நிலை.

இந்தச் சிக்கலான நிலையில், இது ஒரு தமிழர்-பிரச்னை என்பதை உணர்ந்து, தமிழ் மாநில முதல்வரின் பொறுப்பில் இதை விட்டதும், 'ரா' போன்ற அமைப்புக்களின் பிடியிலிருந்தும், பந்தாரி, தீட்சித் போன்ற அதிகாரிகளின் தர்பாரிலிருந்தும் பிரச்னையைப் பிரித்ததும் பிரதமரது நல்லெண்ணத்தைப் பிரதிபலிக்கின்றன. ''விடை காண வேண்டும'' என்கிற உண்மையான ஈடுபாட்டைக் காட்டுகின்றன.

ராமஜன்மபூமியிலே இப்படி நடந்தால் இந்து மக்களது கோபம், அப்படி நடந்தால் முஸ்லிம்களின் கோபம் என்ற நிலையில், பிரச்னையைக் கொஞ்ச காலத்திற்குத் தள்ளிப் போடுங்கள். ''எரிகிற தீக்கு எண்ணெய் வார்க்காதீர்கள்!'' என்று கேட்டுக் கொண்ட விதம், அதை விஸ்வ ஹிந்து பரிஷத் ஏற்றுக் கொண்ட நிலை இரண்டும் வி. பி. சிங்கின் சாதனை என்றே சொல்ல வேண்டும்.

பஞ்சாப், இலங்கை, ராமஜன்மபூமி அளவுக்குக் காஷ்மீர் பிரச்னையில் அவரை நம்மால் பாராட்ட முடியவில்லை.

''நிதானமுள்ள மனிதர். சட்டென்று போரில் இறங்க மாட்டார்!'' என்கிற விஷயம் நமக்கு ஒரு பக்கம் பெருமையாய் இருக்கிறது. அதேசமயம் ''நிதானம் காட்டும் மனிதராக எங்கே காஷ்மீரத்தைக் கோட்டை விட்டு விடுவாரோ என்ற பயமும் எழுகிறது.

காஷ்மீர் பிரச்னை மிக ஆழமான பிரச்னை. போரினால் நம்மை வெற்றி காண முடியாது என்பதை உணர்ந்த பாகிஸ்தான், உள் பகையால், ஊடுருவலால் மத வெறியைக் கிளப்புவதால் குறைந்த செலவில் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று நம்பித் திட்டமிட்டுச் சில ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது. பல காலமாகவே அபாய அறிகுறிகளை நாம் அலட்சியம் செய்து விட்டோம்.

புதிதாகப் பதவி ஏற்கும் போது எதிரிகள் எப்போதுமே சோதிப்பதுண்டு. ''எப்படி மனிதர் நடந்து கொள்கிறார்?'' என்பதைக் கணிக்க ஒரு பெரிய சிக்கலை உருவாக்குவார்கள். அப்படிப் பாகிஸ்தான் உருவாக்கி இருக்கும் சிக்கல்தான் இன்றையக் காஷ்மீர் பிரச்னை.

மதவெறியைக் கிளப்பும் பாகிஸ்தான், சர்வாதிகார ஆட்சிக்கே அதிகம் பழகிவிட்டது. அமெரிக்க நாட்டினால் சீராட்டப்படும் பாகிஸ்தான், சவுதி அரேபியா, லிபியா போன்ற அராபிய நாடுகளால் கொஞ்சப்படுகிறது. இத்தகைய தேசம் நமது அண்டை நாடாக இருக்கும் போது நமது நாடு தனது பாதுகாப்பைப் பற்றி அலட்சியமாக ஒரு நாளும் இருக்க முடியாது. எனவே, காஷ்மீர் விஷயத்தில் ராஜீவ் காந்தி அலட்சியமாக இருந்து நிலைமையை முற்ற விட்டுவிட்டார் என்று குற்றஞ்சாட்டப்படும் போது நமக்குக் கவலை அதிகரிக்கிறது. குற்றச்சாட்டில் உண்மை எவ்வளவு என்பது நமக்குத் தெரியாது. ஆனால் ஒன்று நிச்சயம். நிலைமையைச் சீராக்க ஆட்சியை இன்று வி. பி. சிங்கிடம் கொடுத்திருக்கிறோம் என்பதுதான் அது. குறை சொல்வதும், பழியை வேறு நபர் மீது சுமத்துவதும் எந்தப் பலனையும் அளிக்காது. நாட்டைப் பாதுகாப்பது இன்று பிரதமரின் பொறுப்பு. முழுப் பொறுப்பையும் ஏற்றுச் செயல்படுவதை எதிர்பார்க்கிறோமேயொழிய, குறைகளையும், காரணங்களையும் கேட்டுக் கொண்டிருக்க நாம் தயாராயில்லை.

இங்கேதான் வி. பி. சிங்கின் பிரச்னை —

* பிரதமர் ராஜீவைக் குற்றஞ்சாட்டும் போது கவலை அதிகரிக்கிறது.



— டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி



* காஷ்மீர் பிரச்னை கவலை தருகிறது — பாக். வெளியுறவுத் துறை அமைச்சர் யாகுப் கானுடன் பிரதமரும் ஐ. கே. குஜ்ராலும்.

மனோபாவக் கோளாறு — தலைகாட்டுகிறது. கடந்த பல ஆண்டுகளாகப் பொருளாதாரத் துறையில் நாம் பாராட்டுமளவுக்கு வளர்ந்திருக்கிறோம் என்பது உண்மையாக இருக்கும்போது ''கஜானா காலி, பொருளாதாரம் வளரவே இல்லை'' என்பன போன்ற பொன்மொழிகளை வி. பி. சிங் கூறியிருக்கிறார். அதே போல, பாதுகாப்பை ராஜீவ் அடகு வைத்துவிட்டதாகக் கூறியிருக்கிறார்.

வளர்ந்த, நிதானமுள்ள, அனுபவசாலியான வி. பி. சிங் முன்னோக்கிப் பார்க்க வேண்டும். பின்னோக்கி ராஜீவை அல்ல. காஷ்மீரைத் தமது நிதானத்தினால் பொறுமையினால், உயர் குணத்தினால் வி. பி. சிங் பறிகொடுத்தார் என்றால் ஒரு கணம் கூட இந்திய மக்கள் பொறுக்க மாட்டார்கள். ஒரு தலைவனுக்கு நிதானம் மட்டும் போதாது. பொறுமை மட்டும் பூஷணமல்ல. வியூகம் வேண்டும், சாமர்த்தியம் வேண்டும். துணிவு வேண்டும். அதைச் சரியான இடத்தில் சரியான சமயத்தில் காட்ட வேண்டும். சில சமயம் தேவைப்படுவது சில அடையாளங்கள்தான்.

கியூபா-நாட்டிலே ரஷ்ய ஏவுகணைகளை அமெரிக்கா நோக்கி ருஷ்யா குவித்த போது, ஜான்கென்னடி கியூபாவை முற்றுகை செய்தார். ஏவுகணையோ உணவுப் பொருளோ எதுவும் வர விட மாட்டோம் என்று கப்பற்படையைக் கியூபாவைச் சுற்றி நிறுத்தினார். துணிவும் தீர்மானமும் கொண்ட தலைவன் எதிரிக்கு அனுப்பிய இந்த சமிக்ஞைகளே வெற்றி தேடித் தந்தன.

வி. பி. சிங் எத்தகைய அடையாளங்களை அனுப்புகிறார் இன்று?

முப்தியின் மகளை விடுவித்ததன் மூலம்— பலவீன அடையாளங்களை. ஐந்து பயங்கரவாதிகளைப் பரிசாக அளித்ததன் மூலம் சரணாகதியை. 'எந்த வெளிநாட்டுக்கும் (இலங்கைக்குப் போனது போல) எங்கள் படைகளை அனுப்ப மாட்டோம்' என்று குஜ்ரால் சொன்னதன் மூலம் ராஜதந்திர மின்மையை.

நாட்டைத் துண்டாடச் சில வெளிநாட்டுச் சக்திகள் (பாகிஸ்தான்) இங்கு செயல்படுகின்றன என்றால் நாம் என்ன செய்ய வேண்டும்?

1. நமது நாட்டின் மொத்த உளவுத் துறையையும் போதுமான ராணுவத்தையும் அனுப்பி உடனடியாக ''வன்முறை செல்லாது'' என்ற உண்மையைக் காஷ்மீரில் நிலைநிறுத்த வேண்டும். கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும்; அரைகுறை நடவடிக்கை அல்ல. சில விஷயங்களில் கண்டிப்பாகவும் வேகமாகவும் செயல்படும் போதுதான் உள்ளூர் விஷமிகளுக்கும் அவர்களைத் தூண்டி விடும் வெளிநாட்டு ஆசாமிகளுக்கும் ''ஜம்பம் சாயாது'' என்ற புத்தி வரும்.

2. எங்கள் நாட்டை நோக்கி உங்கள் ஏவுகணைகளை கியூபா நாட்டில் வைக்க நாங்கள் அனுமதிக்க மாட்டோம்'' என்று அமெரிக்கா ருஷ்யாவுக்கு உணர்த்தியதல்லவா? அம்மாதிரி எங்கள் நாட்டை அழிக்க, துண்டாட — உங்கள் நாட்டில் இத்தனை இடங்களில் பயிற்சி முகாம்கள் நடத்த நாங்கள் அனுமதிக்க மாட்டோம் என்று பாகிஸ்தானிடம் நாம் கூறுவதில் என்ன தவறு?

வி. பி. சிங் நடப்பதற்கு நான்கு நாழி, பேசுவதற்குப் பத்து நாழி, முடிவெடுப்பதற்கு முப்பது நாழி, என்கிற ரீதியில் நடந்து கொள்வதுதான் நமக்கு அச்சத்தைத் தருகிறது.

போஃபர்ஸ் ஊழலைப் பற்றிய அவரது தீவிரத்தைக் கண்டு நாம் பாராட்டுகிறோம். அவருடைய மகன் அஜயசிங் பேரில் சுமத்தப்பட்ட அவதூறுகளை அம்பலப்படுத்த அவர் எடுத்துக் கொண்ட



முயற்சிகள் நமக்கு நம்பிக்கையூட்டுகின்றன. ஆனால் அதே சமயம் வி. பி. சிங் சந்திர சேகரை ஏமாற்றித் தேவிலாலைத் துணைப் பிரதமராக்கிப் பதவி ஏற்ற விதம் நமக்கு ஏமாற்றத்தைத் தருகிறது. இத்தகைய கோணல்களை வி. பி. சிங் போன்றவர்களிடம் நாம் எதிர்பார்க்கவில்லை.

கிராமப்புறங்களுக்கு நமது நாட்டின் மொத்தச் செலவில் சரிபாதி ஒதுக்கப் போகிறோம் என்ற முடிவு; வானொலி, டெலிவிஷன் இவற்றிற்குத் தன்னாட்சி; இந்திய கலாசார விழா செலவுகள் அனாவசியம் என்ற கொள்கை; இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு, மாநிலங்களுக்கு அதிக உரிமைகள்; பஞ்சாயத்து திட்டம் போன்றவை அனைத்தும் வரவேற்க வேண்டியவை.

கொள்கைகள் அளவிலே அவருக்கு நல்ல ஆலோசகர்கள் இருப்பதாகவே படுகிறது. அது மேலும் வளர வேண்டும். நெய்வேலியிலே கிடைக்கும் நிலக்கரிக்கு மத்திய அரசு உரிமை கொண்டாடுகிறது என்றால், அதே போல, மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, கேரளத்து நதிகள் என்று நாடு முழுவதும் வீணாகும் அறுபது சதவிகிதத் தண்ணீரைத் தேசியமயமாக்க வேண்டும் என்ற கருத்து ஏன் ஏற்கப்படக் கூடாது?

வி. பி. சிங் தகுதிகளால் தன்னை வளர்த்துக் கொண்ட மனிதர். அறிவால், அனுபவத்தால், படிப்பால், உலக ஞானத்தால் பக்குவப்பட்ட மனிதர். வயது ஒரு நிறைவை அவருக்கு அளித்திருக்கிறது.

''சாதிக்க முடியும்; சாதிப்பார்'' என்ற



* இலங்கைப் பிரச்னையில 'விடை காண வேண்டும்' என்ற உண்மையான ஈடுபாடு தெரிகிறது— இலங்கை வெளியுறவுத் துறை அமைச்சர் ரஞ்சன் விஜயரத்னேவுடன்.

நம்பிக்கை மக்களுக்கு இருக்கிறது. தவறுகளைத் திருத்திக் கொள்ளும் மனோபாவம் அவரிடம் இருப்பதால் (உ.ம்: குல்லாய் விவகாரம்) தெளிவு பிறக்கும்; சரியான முடிவுகளும் போகப் போகப் புலப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

காஷ்மீர் — இதுதான் நமக்குக் கவலை தருகிறது. முன்பு உத்தரப்பிரதேசத்து முதல்வர் பதவியிலிருந்து இறங்கியது போல, ''என்னால் முடியாது'' என்று இறங்கி விடுவாரா? அல்லது ராஜீவ் மீது பழிபோட்டு விட்டுக் காஷ்மீரைக் கோட்டை விடுவாரா? அல்லது கண்டிப்பும் துணிவும் வி. பி. சிங்கிடம் உண்டு என்று உலகுக்கு உணர்த்துவாரா?

மற்றொரு நூறு நாள் கொடுத்துப் பார்க்க மக்கள் தயாராயிருக்கிறார்கள். ''வி. பி. சிங் ஆட்சி தொடர வேண்டும்; நல்ல ஆட்சியைத் தர வேண்டும்'' என்பதுதான் நமது பிரார்த்தனை.

அட்டை வண்ணப்படம்: சுபா.



# கல்கி

1990 மார்ச் 11
மலர் 48 இதழ் 32
சுக்ல மாசி 27



## ராஜீவிடம் ராஜினாமா கேளுங்கள்!

காங்கிரஸ் கட்சி மறுபடியும் அதன் பாரம்பரியப் பெருமையைத் திரும்பப் பெறுவது இனி அசாத்தியம் என்றாலும், அதனை அடியோடு மடிந்து போகாமல் காப்பாற்ற முடியுமா என்றாவது பார்க்க வேண்டும். ஊழல் மிகுந்த ஆட்சியை அளித்ததன் மூலம், காங்கிரஸுக்கு மக்களிடம் இருந்த மதிப்பை அழித்தவர் ராஜீவ் காந்தி. போஃபர்ஸ் பீரங்கிகள், நீர்மூழ்கிக் கப்பல், ஹெலிகாப்டர்கள் ஆகியவற்றை வாங்குவதில் இல்லு முல்லுகள்; ஃபேர்பாக்ஸ் ஊழல் என்று முன்பு அம்பலமானவை போக, இப்போது புதிதாகப் பல ஊழல்களும் வெளிச்சத்துக்கு வந்துள்ளன.

பெங்களூரில் பயங்கர விபத்துக்கு உள்ளான ஏர் பஸ் விமானங்களை வாங்குவதில் ராஜீவ் அசாதாரண அவசரம் காட்டியிருக்கிறார் என்பது தெரிய வந்துள்ளது. கோடிக் கணக்கில் மக்களின் வரிப்பணம் இதில் முடங்கியிருக்கிறது. இந்த அசாதாரண அவசரத்துக்குக் காரணம் என்ன என்பது ஆராயப்பட்டு வருகிறது.

போஃபர்ஸ் ஊழல் தொடர்பாக ஏற்கெனவே பேசப்பட்டு வந்த ஸ்விஸ் வங்கிக் கணக்குகள் தவிர புதிதாக ஒரு கணக்கும் கண்டுபிடிக்கப்பட்டு, அதுவும் ஸ்விஸ் அரசினாலேயே முடக்கப்பட்டு உள்ளது. இந்தக் கணக்கில் உள்ள தொகையையும் சேர்த்தால் போஃபர்ஸ் ஊழலில் அறுபது கோடி அல்ல, நூறு கோடிக்கும் மேல் மக்களின் வரிப்பணம் கபளீகரம் ஆகியிருப்பது தெரிய வருகிறது.

புதுதில்லியில் இரண்டு ஐந்து நட்சத்திர ஓட்டல்களுக்குத் தரப்பட்டுள்ள அநியாய சலுகைகள் காரணமாக மக்களின் வரிப்பணம் பல கோடி நஷ்டமாகியுள்ளது. இந்த ஓட்டல்களை நடத்துகிறவர்கள் ராஜீவுக்கு மிகவும் நெருங்கியவர்கள்.

ஜப்பானிய நிறுவனம் ஒன்று எண்ணெய் இயற்கை வாயு கமிஷனுக்கு சப்ளை செய்த உபகரணங்களுக்காக ராஜீவின் நண்பர் லலித் சூரியின் நிறுவனம் எக்கச்சக்கமாகக் கமிஷன் அடித்திருப்பதை மத்திய அரசின் பிரதம அரசாங்க வழக்குரைஞர் பராசரன் தமது அறிக்கையில் அம்பலப்படுத்தி, நடவடிக்கை எடுக்குமாறு அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

ஒரு நாட்டின் தலைவர் நேரடியாக ஊழலில் ஈடுபட்டதாக நிரூபிக்கப்பட்டால் தான் குற்றம் என்பதல்ல. ஊழல் நடக்காமல் நிர்வாகம் செய்து மக்களின் வரிப்பணம் விரயமாகாமல் பாதுகாப்பது அவர் கடமை. இதைச் செய்யாததுடன், தமது நெருங்கிய நண்பர்கள் கமிஷன், வரிச் சலுகை என்ற பெயர்களில் கொள்ளை அடிக்க அனுமதித்தார் என்றால் அதற்கு என்ன அர்த்தம்?

அர்த்தத்தைப் புரிந்து கொண்ட வடமாநில மக்கள், மீண்டும் ஒருமுறை வன்மையான முறையில் தீர்ப்பளித்திருக்கிறார்கள். பி. ஜே. பியும் ஜனதா தளமும் தொகுதி உடன்பாடு கண்டு ஒத்துழைக்கத் தீர்மானித்த பிறகு, முன்பு போல காங்கிரஸ், மைனாரிட்டி வோட்டில் சட்ட மன்றத்தில் மெஜாரிட்டி பலம் பெற முடியாது என்பது எதிர்பார்க்கப் பட்டதே. ஆனால் தாமரையிலும், சக்கரத்திலும் குத்தப்பட்டுள்ள முத்திரைகள் எல்லாமே பி. ஜே. பி., ஜனதாதள ஆதரவு வோட்டுக்கள் அல்ல. அப்படி ஆதரவு வோட்டுக்கள்









பெருமளவுக்கு மத்தியிலுள்ள தேசிய முன்னணி அரசு, நூறு நாள் அவகாசத்தில் பிரமாதமாக எதையும் சாதித்து விடவும் இல்லை. பஞ்சாப், காஷ்மீர், இலங்கைத் தலைவலிகளுக்குக் களிம்பு தடவும் பணியில்தான் அதிகமாக ஈடுபட்டிருக்கிறது. எனவே, ராஜீவ் எதிர்ப்பு வோட்டுக்களே பி. ஜே. பி., ஜனதாதள வெற்றிக்கு அதிகமாகக் கைகொடுத்திருக்கின்றன. காங்கிரஸின் இன்றையப் பரிதாப நிலைக்கும் இதுவே காரணம். 85 தொடக்கத்தில் காங்கிரஸ் பெற்ற மகத்தான வெற்றி என்ன? 90ன் தொடக்கத்தில் அதன் பரிதாப நிலை என்ன? யார் பொறுப்பு?

ராஜீவ் இதனை எண்ணிப் பார்க்காவிட்டாலும் காங்கிரஸ் கட்சி நினைத்துப் பார்க்க வேண்டும். போஃபர்ஸ் ஊழல் புகார்கள் உச்ச கட்டத்தை அடைந்திருந்தபோதே தலைமை மாறியிருந்தால், காங்கிரஸ் இந்தப் படுதோல்வியைச் சந்திக்க நேர்ந்திராது. ஆனால் காங்கிரஸின் இரண்டாவது அணி தலைவர்களுக்கு அப்படி ஒரு சோதனை முயற்சி செய்து பார்க்கிற துணிவு இல்லை. தோற்கிற குதிரை மீதே பணம் கட்டி, தோற்றுப் போனார்கள்!

பாரம்பரியப் பெருமைமிக்க காங்கிரஸினிடம் மக்களுக்கு என்றுமே அன்பும் அனுதாபமும் உண்டு. ஆனால் அதன் தலைமை இன்று சரியில்லை என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். ஆபத்தான தலைமையின் கீழ் நாட்டை அடகு வைக்க வாக்காளர்கள் தயாராக இல்லை.

இதைப் புரிந்து கொண்டு, ராஜீவ் தாமாகவே கட்சித் தலைவர் பதவியிலிருந்து ராஜினாமா செய்தால் நல்லது. இல்லையெனில் இதர காங்கிரஸ் தலைவர்கள் நடவடிக்கை எடுக்க வேண்டிய தருணம் வந்து விட்டது. இனியும் தாமதிப்பது காங்கிரஸுக்குச் சவக்குழி தோண்டுவதாகும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

**கவிதைக்குள் ஒரு கவிதை:**

# அரை நொடி நின்றோம் ஆயிரம் காதம் பின்னடைந்தோம்!



அரை நொடி நேரம்
நின்றோம் யாம் — இவண்
ஆயிரம் காதம் பின்னடைந்தோம்'

குலோத்துங்கனின் இந்த வரிகள் என்னை மிகவும் கவர்ந்தன.

இந்த நூற்றாண்டில் நாம் நேரத்தைப் பொன் போல் கருதி உழைக்க வேண்டிய அவசியத்தை உணர்த்துகிறது கவிதை. மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் நாம் எவ்வளவு பின்னடைந்துள்ளோம் என்பதை இடித்துக் காட்டுகிறது.

அரை நொடி நேரம் நின்றதனால் ஆயிரம் காதம் நம்மை விட்டுப் போய்விட்டது! அரை நொடித் தூக்கத்தினால் நம்மோடு வந்த நண்பர்கள் ஆயிரம் காதம் முன்னேறி விட்டார்கள். அரை நொடி நேரம் நாம் பேசிய வெற்றுப் பேச்சு நம்மை இந்தப் பூமி மண்டலத்திலேயே நிறுத்திவிட்டது. மற்றவர்களோ சந்திர மண்டலத்திற்கும் சென்று விட்டார்கள். நாமோ பழம் பெருமைகளைப் பேசிப் பேசி, பின்னடைந்து கொண்டிருக்கிறோம். அவர்களோ, புதிய, புதிய கண்டுபிடிப்புக்களை உலகிற்குத் தந்தார்கள். உயர்ந்து கொண்டேயிருக்கிறார்கள். வியந்து நிற்கிறோம் நாம்.

மனித சக்திகள் ஏராளமிருந்தும் மார்க்க பின்மையால் கைபிசைந்து நிற்கிறோம். மூளைத் திறமையை வெளிநாட்டிற்கு அனுப்பிவிட்டு, வீணான ஜம்பத்தால் விடிவு காலம் உண்டாகும் என்று காத்து நிற்கிறோம். எத்தனை காலம் நாம் இப்படி நிற்பது? கவிஞருடைய ஆதங்கம் நம்மைக் கலங்க வைக்கிறது.

'இமைப் பொழுதும் சோராதிருத்தல்' என்றான் பாரதி. இங்கு கவிஞர் 'அரை நொடி நேரம் நின்றோம் யாம்' என்கிறார். இன்றைய இந்தியா எதனால் பின்னடைந்து விட்டது என்று சிந்திக்க வைக்கிறார். ஒரு வினாடி தூங்கி விட்டதனால் எத்தனை பேர்கள் ரயிலையும், பஸ்ஸையும் தவற விட்டார்கள்? ஒரு வினாடி தூங்கி விட்டதனால் எத்தனை பேர்கள் சந்தர்ப்பங்களை இழந்து முன்னேற முடியாமல் தவிக்கிறார்கள். இத்தனை பேர்களையும் நம் கண்முன் நிறுத்துகிறார் கவிஞர்.

ஒருவன் வினாடி செயலற்று நின்று ஒரு சந்தர்ப்பத்தை இழப்பானாகில் எழுபது கோடி மக்களுக்கு ஏற்படும் இழப்பு எவ்வளவு? ஓராண்டில் நாட்டுக்கு ஏற்படும் நஷ்டம் எத்தனை எத்தனை? சிந்திக்கச் செய்கிறார் கவிஞர்.

ஒரு கவிதையின் சாராம்சம் அதன் ஏதாவது ஒரு வரியில் இருந்தால் போதும் என்கின்றனர் திறனாய்வாளர்கள். இந்தக் கவிதையில் ஒவ்வொரு வரியும் நம்மைச் சிந்திக்க வைத்தாலும் இந்த இரு வரிகளும் ஆழமாக இதயத்தில் தைக்கின்றன.

— க. இராசரெத்தினம், திருச்சி—21.

ராஜ்மோகன் காந்தி



# "இந்திரா காந்தியின் சர்வாதிகார மனப்பான்மை"

**வி.** வி. கிரி வெற்றி பெறுவார் என்பதை ராஜாஜி வழக்கமான தீர்க்கதரிசனத்துடன் கூறியிருந்தார். ஜாகிர் ஹுசேன் காலமான சில தினங்களுக்குள் மசானிக்கு எழுதிய கடிதத்தில், ''கடைசியில் காங்கிரஸ் கட்சி கிரிக்கு ஆதரவு தர வேண்டிய நிர்ப்பந்தத்துக்குத் தள்ளப்படும். அவர் ஒரு நல்ல ரப்பர் ஸ்டாம்ப் ஜனாதிபதியாக விளங்குவார்'' என்று ராஜாஜி குறிப்பிட்டிருந்தார்.

சுதந்திரா கட்சியும், ஜன சங்கமும், சரண் சிங்கின் கிரந்தி தளமும் தேஷ்முக்கை அணுகின. பத்து ஆண்டுகளுக்கு முன்னர் தமது புதிய கட்சியின் தலைவராக இருக்குமாறு இவரைத்தான் ஸி. ஆர். கேட்டுக் கொண்டிருந்தார். இப்போது இம் மூன்று கட்சிகளின் சார்பிலும் தேஷ்முக், ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்டார். மூன்று கட்சிகளும் தங்கள் எம். எல். ஏக்கள், எம்.பிக்களிடம் முதல் வோட்டை தேஷ்முக்குக்கும், இரண்டாவது வோட்டை சஞ்சீவ ரெட்டிக்கும் அளிக்குமாறு கேட்டுக் கொண்டன. கம்யூனிஸ்ட் கட்சிகளும் பெரும்பாலான சோஷலிஸ்டுகளும், இடது சாரி பக்கமாகச் சாய்வது போல் தன்னைக் காட்டிக் கொண்ட கிரிக்கு ஆதரவு தரத் தீர்மானித்தனர். கிரி, 'இந்திரா காந்தியின் ஆதரவு பெற்ற வேட்பாளர்' என்பது பகிரங்க ரகசியமாக விளங்கியது. சஞ்சீவ ரெட்டிதான் காங்கிரஸின் அதிகாரபூர்வ வேட்பாளர் என்றாலும் காங்கிரஸ்காரர்களை, ''மனச்சாட்சிப்படி வோட்டளியுங்கள்'' என்று இந்திரா காந்தி கேட்டுக் கொண்டார்!

துணிவுடன் செயலாற்றிய இந்திரா, நிதி அமைச்சர் பொறுப்பிலிருந்து தேசாயை விடுவித்தார்; திடீரென்று நாட்டின் பதினான்கு முன்னணி வங்கிகளை அரசுடைமையாக்கினார். இவ்வாறு ஒரே விச்சில் ஜனாதிபதி தேர்தல் தினத்துக்குப் பல நாட்கள் முன்பாகவே, இடது சாரிகளின் மாபெரும் வீராங்கனையாகக் கருதப்பட வழிவகுத்துக் கொண்டார். ''ஏழைகளைக் காப்பாற்ற வந்த அன்னை'' என்று அவரைப் போற்றிய மக்கள் கூட்டம் அவர் இல்லத்தின் முன் தோன்றி வாழ்த்தொலிகளை எழுப்பியது! கம்யூனிஸ்டுகள், சோஷலிஸ்டுகள் ஆகியோரின் வோட்டுக்கள் கிரிக்கே என்பது உறுதியாயிற்று. என்றாலும் போட்டா போட்டி பலமாகத்தான் இருந்தது. ரெட்டியை விட, கிரி சில வோட்டுக்களைக் கூடுதலாகப் பெறுவார் என்பது உறுதியானாலும் தேஷ்முக்குக்கும் கணிசமான முதல் வோட்டுக்கள் விழும் என்பது தெரிந்திருந்தது. அப்படி தங்கள் முதல் வோட்டுக்களை தேஷ்முக்குக்குப் போட்ட எல்லாருமே கட்சிக் கட்டளையை ஏற்று, தங்கள் இரண்டாவது வோட்டை சஞ்சீவ ரெட்டிக்குப் போட்டிருந்தால் ரெட்டியே ஜெயித்திருப்பார். ஆனால் இவர்களில் பலர் — சில சுதந்திரக் கட்சி எம்.எல்.ஏக்கள் உள்பட — திசைமாறிப் போனார்கள்.

**கா**ங்கிரஸ் பிளவுபட்டது. இப்போது எதிர்க்கட்சிகள், இரண்டு காங்கிரஸையுமே எதிர்ப்பதா அல்லது அவற்றில் ஒன்றையா என்று தீர்மானிக்க வேண்டிய நிலையில் இருந்தன. இடதுசாரிக் கொள்கையில்தான் வோட்டுக்கள் இருக்கின்றன என்பதையும், இந்திராவிடம்தான் பலம் இருக்கிறது என்பதையும் புரிந்து கொண்ட தி. மு. க., கிரியை ஆதரித்து, இந்திராவின் காங்கிரஸுக்குப் பக்கபலமாக நின்றது. ராஜாஜியும் காமராஜரும் நெருங்கி வந்தார்கள். இதற்கு இன்னும் இரு விஷயங்கள் துணை செய்தன. தி. மு. க. மதுவிலக்குக் கொள்கையைக் கைவிடப் போவதற்கான அறிகுறிகள் தென்பட்டது ஒன்று. மன்னர்களின்



* சவான்: ''கட்சி மாறும் நபர்''



* சரண்சிங்: ''சந்தர்ப்பவாதப் போக்கு''

மான்யங்களை ஒழித்துக் கட்டுவதென்று இந்திரா எடுத்த முடிவுக்குத் தி. மு. க. ஆதரவு அளித்தது இரண்டு. ஆனபோதிலும் தி.மு.க.வுடன் சுதந்திரக் கட்சிக்கு இருந்த தொடர்பைச் சட்டென்று துண்டித்து விட ஸி. ஆர். விரும்பவில்லை. காங்கிரஸ் பிளவுபட்டு ஆறு மாதங்களுக்குப் பிறகும், ''தமிழ் நாட்டில் நான் தி. மு. க.வுக்கு அளித்து வரும் ஆதரவை வாபஸ் பெறப் போவதில்லை'' என்று ராஜாஜி சொன்னார். அதோடு, ''கம்யூனிஸ்டுகளுடன் உங்களுக்கு உள்ள தொடர்பை விட்டு விடுங்கள்'' என்று தி. மு. க.வை அடிக்கடி வற்புறுத்தியும் வந்தார். 1970 மார்ச்சில் சுதந்திரக் கட்சியைச் சேர்ந்த எஸ். எஸ். மாரிசாமி ராஜ்யசபை உறுப்பினரானார். இவரைத் தமிழ் நாடு சட்டமன்ற தி. மு. க. மற்றும் காமராஜ் பிரிவு காங்கிரஸ் உறுப்பினர்கள் சேர்ந்து வோட்டளித்து அனுப்பி வைத்தனர். ஆனாலும் தி. மு. க. சுதந்திரா நட்புறவில் விரிசல் விழாமல் காப்பது அசாத்தியம் என்றே தோன்றியது. ஸி. ஆருடைய நோக்கில் இந்திரா காந்தியின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகள் எல்லாமே இடதுசாரிப் போக்கில் திரும்பியிருந்தன. தி. மு. க. இந்திராவைத் தொடர்ந்து ஆதரித்து வந்தது. 1970 இறுதியில் உள்ளாட்சித் தேர்தல்கள் அறிவிக்கப்பட்ட போது, சுதந்திரக் கட்சி பழைய காங்கிரஸை (காமராஜர்) ஆதரிக்கும் என்றும் தி. மு. க. வை அல்ல என்றும் ஸி. ஆர். அறிவித்தார்.

இந்திரா காந்தியைக் கடுமையாகத் தாக்கினார் ஸி. ஆர். அவரது கொள்கைகளையும் செயல்பாடுகளையும் குறைகூறி விமர்சித்ததுடன், ஒரு சர்வாதிகாரிக்குரிய மனப்பாங்கு அவரிடம் காணப்படுவதாகக் கூடக் குற்றம் சாட்டினார். இத்தனை கடுமையாக இந்திராவைப் பற்றி இதுவரை யாருமே பேசியதில்லை.

'சர்வாதிகார மனப்பான்மை இந்திராவுக்கு இருக்கிறது' என்று கூறியதோடு, வேறு பல விஷயங்களையும் அவரைப் பற்றிச் சொன்னார் ராஜாஜி: ''இந்திரா சில மாயைத் தோற்றங்களால் கவரப்படுகிறார்; அவற்றிலிருந்து அவர் தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டும். மற்றவர்களை விடத் தாம்தான் சாமர்த்தியசாலி என்று எண்ணுகிறார். தன்னம்பிக்கையை நான் வேண்டாம் என்று கூறவில்லை; ஆனால் அடக்கம் என்ற உன்னதமான குணத்தைப் பெற்றிருப்பதும் நல்லது. தாம் ஒருத்திதான் நவீன சிந்தனை உடையவள் எ[illegible] அவர் கருதக் கூடாது. காலத்துக்கு ஒவ்வாத சோஷலிஸம் என்பது நவீனமல்ல. இந்தியாவில் உள்ள ஏழைகளைத் தாம் நேசிப்பதாக இந்திரா அடிக்கடி கூறுகிறார். ஏதோ தாம் ஒருவர்தான் இத்தகைய உணர்வுகளைக் கொண்டிருப்பது போலவும் வேறு யாருக்குமே ஏழைகளிடம் அக்கறை இல்லை என்பது போலவும் அவர் பேசுவது ஒருவித அகம்பாவமே.'' (சுயராஜ்யா 18.10.69)

'மகாராஷ்டிரா சட்டமன்ற உறுப்பினர்கள் சஞ்சீவ ரெட்டிக்கே வாக்களிக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டிருந்த சவான், காங்கிரஸ் பிளவுபட்டதும் இந்திரா பக்கம் சேர்ந்தார். ஸி. ஆர். எழுதினார்: ''தமது நண்பர்களைக் கைவிட்டு விட்டுக் கட்சி மாறும் ஒரு நபரை எந்த அளவுக்கு நம்பலாம் என்பதை நன்கு அறிந்த புத்திசாலிதான் இந்திரா என்பது சவானுக்குத் தெரியாதா?'' சவானைப் போலவே சரண்சிங்கும் இந்திராவுடன் சமாதானம் செய்து கொண்டு 1970 பிப்ரவரியில் உத்தரப் பிரதேசத்தின் முதல்வரானார். ஸி. ஆர். எழுதினார்: ''சரண்சிங்கின் அரசியல், விநோதமான ஒன்று. யாரை, எதற்காக, எந்தச் சமயத்தில் ஆதரிக்க வேண்டும் என்று அடிக்கடி மாறுகிற அவரது சந்தர்ப்பவாதப் போக்கு நேர்மையான மனிதர்கள் எல்லாரையும் அருவருப்புக் கொள்ளச் செய்கிறது.''

ஆனால் சரண்சிங் இந்திரா காந்திக்கு வசதியான பங்காளியாக விளங்கவில்லை. எனவே இந்திரா, உ.பி. சட்டசபையைத் தாற்காலிகமாக இயங்காமல் செய்து, ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வந்து, சரண்சிங்கை பதவி நீக்கம் செய்யத் தீர்மானித்தார். இதற்காகத் தயாரிக்கப்பட்ட உத்தரவுகள், ஜனாதிபதியின் கையெழுத்துக்காக அப்போது ருஷ்யாவில் இருந்த கிரியிடம் பறந்து சென்றன! மிகுந்த விசுவாசத்துடன் கிரி அவற்றில் கையெழுத்திட்டார். ஸி. ஆர். கண்டித்தார்: ''இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட ஆவணத்தில் குறியிடப்பட்டிருந்த இடத்தில் கிரி கையெழுத்துப் போட்டிருக்கிறார். பிரச்னையின் மறுபக்கத்தை அவர் விசாரிக்கவே இல்லை. ருஷ்யாவில் உள்ள இந்தியத் தூதரின் அலுவலகத்துக்குப் போய்க் கையெழுத்துப் போட வேண்டும் என்ற அக்கறை கூட அவருக்கு இருக்கவில்லை!''

(தொடரும்)

## வீசி மகிழ ஒரு புதிய விளையாட்டு...

# ஃப்ரிஸ்பீ

**இலவசம்**

ஃப்ரிஸ்பீ!
ஒவ்வொரு 500 கிராம்
சாக்கலேட் காம்ப்ளான்
டின்னுடனும்.

**காம்ப்ளான்®**
திட்டமிட்ட பரிபூரண உணவு




இப்போது உங்கள்
குழந்தைகளுக்கு
ஊட்டத்துடன்
உற்சாகத்தையும்
சேர்த்து அளிப்பீர்.
காம்ப்ளான் பறக்கும்
ஃப்ரிஸ்பீயை அவர்கள் வீசி
விளையாடி மகிழக் காண்பீர்.

தற்போது, தேர்ந்தெடுத்த
சில இடங்களில் மட்டுமே கிடைக்கும்.

GL/13/202 TAM

* நெல்சன் மண்டேலா பற்றிய கட்டுரை இந்த இதழின் மணிமகுடமாய்த் திகழ்ந்தது!

பெங்களூர். ப. மூர்த்தி.

* தலையங்கம் தகுந்த நேரத்தில் தரப்பட்டுள்ளது. தமிழக முதல்வர் திருப்புமுனையை வெறுப்பு முனையாக, நெருப்பு முனையாக, கறுப்பு முனையாக மாற்றாமலிருக்க முயல வேண்டும். கத்தி முனையில் நடக்கின்ற நேரமாகத் தற்போதைய அரசியல் விளங்கு கிறது. வீரமணி போன்றவர்கள் செய்ய வேண்டிய சமுதாயப் பணி எவ்வளவோ இருக்கிறது. ஆனால் மக்களிடையே அமைதியைப் பாதிக்கும் இத்தகைய செயலில் ஈடுபடுவதைத் தடுப்பதற்கு முதல்வர் அவர்கள் முன்வர வேண்டும்.

வேலூர் — 12. எஸ். முல்லைச்செல்வி.

* 'மாதம் ஒரு தொகுதி' அறிவிப்பைப் படித்ததும் மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது. குலுக்கல் முறையில் இருபது தொகுதிகளைத் தேர்ந்தெடுப்பதில் எங்கள் தொகுதி விடுபட்டுப் போகாமல் இருக்க வேண் டுமே என்று இப்போது முதலே கவலைப்படுகிறேன்.

போடிநாயக்கனூர். பி. அய்யனார்.

* இந்தோனேஷியாவில் ராமாயணத்தை நாடக மாக நடிக்கும் முஸ்லிம்கள், "ராமன் உங்களுக்குக்

அவர்கள் நித்திரையைக் கெடுக்காதீர்கள்!

வட்டமேஜை

கடவுளாக இருக்கலாம்... அவன் எங்கள் ஹீரோ!" என்று சொன்ன வார்த்தையைப் படித்த போது — நம்ம 'ராமஜென்மபூமி' விவகாரம்தான் பளிச் சென்று நினைவுக்கு வந்தது!

மன்னார்குடி. ஜி. நீலா.

* 'ராமாயணம் — ஒரு புதிய பார்வை' அட்டைப் படக் கட்டுரை படித்தேன். தொலைக்காட்சியில் ஒளிபரப்ப இருக்கும் நூறு நிமிட சமஸ்கிருத வால்மீகி ராமாயணத்தைப் பற்றி அதன் இயக்குனர் கே. எஸ். சீனிவாசனின் பேட்டி அருமை.

தச்சநல்லூர். என். வி. உச்சிமாகாளி.

* மனித நேயம் இன்னும் மடிந்து விடவில்லை என்பதை உறுதிப்படுத்தியது ஆர். சூடாமணியின் 'நாம் மனிதர்கள்' சிறுகதை...!

பெங்களூர் — 13. கவிஞர் 'தாரகை'

* 'நாம் மனிதர்கள்' கதை படித்தேன். மனத்திற்கு நிறைவு தந்த கருத்தாழம் மிக்க கதையைக் கொடுத்த ஆசிரியர் அவர்களுக்கு என் வாழ்த்துக்கள்.

வெள்ளக்கோவில். வி. வி. செல்வராஜ்.

* ஜெயவண்ணன் எழுதிய 'பிறந்தநாள் நாளை மறுநாள்' சிறுகதை வெகுஜோர். இந்த மாதிரி கருப்படியான ஒரு சிறுகதையைப் படித்து வெகுகால மாகிறது.

மானாமதுரை. ஜெ. எம். முகமது ரஃபி.

* 'ரம்யப்ரபா'வின் 'பொருத்தம்' சிறுகதை நன்றாக இருந்தது. கவிஞன் என்பவன் கவிதையின் அங்கம்' அவனை நேசிப்பவர்கள் அவன் கவிதையை வைத் துத்தான் அவனை மதிப்பிடுகிறார்கள்' என்ற கருத்து நன்றாக இருந்தது.

சென்னை — 75. இதயகீதம் அ. இராமானுசம்.

* உமா கல்யாணி எழுதிய ஒரு பாடவேளை முடி கிறது சிறுகதை கண்டேன்... யதார்த்தம் என்றால் இதுதான் யதார்த்தம்! நடைமுறையை நாசூக்காய் அருமையாய் விளக்கியிருந்தார்.

சென்னை — 82. ஏால். எஸ். யோகா.

* மாதம் தோறும் ஒரு எம். எல். ஏ. வைப் பேட்டி கண்டு புதுமையைப் புகுத்த முயன்றுள்ளீர்கள். மாதம் ஒரு மாவட்டம் சிறப்பிதழ்கள் போல் இனி வரும் இதழ்களிலும் ஆவலைத் தூண்டும் ரிப்போர்ட்டுகள் வரும் என்று ஆவலோடு எதிர்பார்க்க வைத்து விட் டீர்களே!

குடியாத்தம் (வ. ஆ.) ஸ்ரீ சத்யசாயி பாபா தாசன்.

* பெரியார், அண்ணா வழியில் கலைஞரும் பிராம ணர்களுக்கு நேரடியாக அறிவுறுத்தி, பிராமணர் அல்லாதவர்களிடம் அவர்களுக்கு இருந்து வந்த துவேஷத்தைக் களைய முயல்பவர்தான். ஏதோ கலை ஞரைவிட அ. இ. அ. தி. மு. க. கட்சிதான் பிராமண நேசர்கள் என்ற தவறான நினைப்பில் அச்சங்கம் தி. மு. க. வுக்கு எதிராக வோட்டளிக்க அறிக்கை விடுத்ததால்தான் கலைஞருக்கு இயல்பான கோபம்.

திருவாரூர். அ. சம்பத்.

* 'காமராஜர் திட்டம்' போன்று 'கருணாநிதித் திட்டம்' ஒன்றை எதிர்பார்த்து வானொலி, தொலைக் காட்சிக்கு முன்னால் காத்திருந்து, ஏமாந்து போன எங்களைப் போன்றவர்களின் நெஞ்சத்து உணர்வு களைத் தங்களது தலையங்கத்தின் மூலம் எடுத்துக் கூறியதற்கு மிக்க நன்றி. மனமாற்றத்துக்கு அன்பி னால் முயற்சி செய்வோம்' என்ற கலைஞரின் வார்த் தையைத் தாங்கள் நம்பியிருக்கிறீர்கள். ஆனால் அவரது சொல் ஒன்று, செயல் வேறாக அல்லவா உள்ளது! இல்லையென்றால் நிர்வாகத்தில் கட்சித் தலையீடு இருக்காது என்று கூறிய அதே முதல்வர், மாநில மாநாடு முடிந்தவுடன் திருச்சி கலெக்டரை மாற்ற வேண்டிய அவசியமென்ன?

திருச்சி — 14. ரத்னபாலன்.

* எம். எல். ஏக்களைத் தயாராகச் சொல்லி அறை கூவல் விடுத்துள்ளீர்கள். தூங்குவது போல் பாவனை செய்பவர்களின் நித்திரையைக் கெடுக்காதீர்கள்!

பார்ப்பன துவேஷத்தை மீண்டும் வெளிக் கொணர்ந்ததாலும், மகனை அதிகாரபூர்வமாகக் கட்சிக்கு வாரிசு என்று சொன்னதாலும், திருச்சி நகரை ஒரு சில நாட்கள் ஸ்தம்பிக்க வைத்ததாலும், கலெக்டரை மாற்றியதாலும் ஏற்பட்ட 'திருப்பு முனை'கள் உங்கள் கண்களுக்குப் படவில்லையோ?

சென்னை — 92. கே. ராஜகோபாலன்.

* தலைநகர்ச் செய்திகள் அனைத்தும் படுசுவார ஸ்யம்! வாரந்தோறும் தொகுத்தளிக்கலாமே!

திருச்சி — 16. எஸ். ராஜகோபால்.



சங்கரி அப்பன்

# சந்தனமும் கருஞ்சாந்தும்!

எல்லோருக்கும் விஜயாவைப் பிடித்துப் போய் விட்டது. எனக்குத்தான் பிடிக்கலே. இதை எப்படிச் சொல்றது? எத்தனை கறுப்பான விஜயா! அதுவும் என் பக்கத்தில் வந்து நின்றால் இன்னும் எத்தனை கறுப்பாக இருப்பாள்!

''நிறம்தான் மட்டு. மற்றபடி நல்ல களையான முகம்'' என்றாள் அம்மா.

''நிறம் என்ன நிறம், ஈடு செய்யத்தான் எவ்வளவு பெரிய, அழகான கண்கள், சினிமா ஸ்டார் பானுப்பிரியாவோடது மாதிரி...'' — இது தங்கை மாலினி.

''ஒரே பெண். வீணை நன்றாக வாசிப்பாளாம். பி.காம்., படிச்சிருக்கா. வேலைக்கு ட்ரை பண்ணலாம்.. நாம பேசிட்டே போறோம், என்ன சுந்தர் உனக்கும் பிடிச்சிருக்கணுமே... நீ என்ன சொல்றே...''

''பிடிக்காம என்ன... அண்ணா மனசுக்குள்ளே விஜி விஜின்னு சொல்லிட்டே இருக்கானே... எனக்குக் காதிலே விழுதே...'' என்று கேலியில் இறங்கினாள் மாலினி.

என்னுள் வெறுப்பு வெடித்தது. அலுவலகம் கிளம்பிக் கொண்டிருந்த நான் ஷூலேஸை மாட்டியபடியே கத்தினேன்.

''கொஞ்சமாவது அறிவிருக்கா உங்களுக்கெல்லாம். அமாவாசை மாதிரி பெண்ணைப் பார்த்திட்டு வந்திட்டு... பிடிச்சிருக்கான்னு கேள்வி வேறயா?''

இதற்கு மேல் பேசப் பிடிக்காமல் வெளியேறினேன். ஸ்கூட்டரை ஆக்ரோஷத்துடன் கிளப்பினேன். ஏனோ அழுகை வரும் போல் இருந்தது. இப்படி மூர்க்கத்தனமாய்ப் பேச வைத்து விட்டார்களே! எனக்குச் சிவப்பான மனைவி வேணும் என்று ஆசை. இது தப்பா? பணத்தையும், நகையையும், வீணை வாசிக்கும் லட்சணத்தையுமா கொஞ்ச முடியும்? ஏன் இவர்களுக்கு இது தெரியவில்லை? கோயில் சிலை கறுப்பில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு வந்து, 'கறுப்புன்னு தள்ளாதேடா...' அப்படின்னு சொல்லி என்னைக் குற்றவாளியாக்குகிற இவர்கள் மேல் அசாத்திய கோபமேற்பட்டது.

வேதனையும் கோபமும் மாறாத முகத்துடன் அலுவலகத்துள் நுழைந்தேன்.



''ஸ்டேஷனுக்கு எங்க தலைவர் பேர் வைக்கணும்னு போராட்டம் நடத்தப் போறோம்!''

''எந்த ஊர் ஸ்டேஷனுக்கு?''

''நம்ம ஊர் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தான்!''

---

''சுந்தர்... என்ன இது முகமெல்லாம் ஜிவ்வுன்னு இருக்கு... கோபமா?'' — இது கோபி.

''ஆள் சும்மாவே சந்தனக் கலர், இதிலே கோபம் வேறே வந்தா, சந்தனத்திலே தவறி விழுந்த குங்குமம் மாதிரி ஆயிடறது அவர் முகம்...'' — இது மைதிலி.

''சுந்தர்... நல்ல சிவப்பான பெண்ணைத் தான் நீ கல்யாணம் பண்ணிக்கணும். அப்பத்தான் பொருத்தமாயிருக்கும்...'' இது மாதவன்.

இவர்களுக்கெல்லாம் தெரிந்தது கூட ஏன் பாசபந்தமுடையவர்களுக்குத் தெரிய வில்லை என்று என்னுள் எரிச்சல் ஏற்பட்டது.

வேலையில் மூழ்கினேன்.

பிற்பகல் பதினொரு மணி இருக்கும்.

''சுந்தர் உனக்கொரு லெட்டர்...'' மணி கொடுத்து விட்டு, ''யார்கிட்டேயிருந்துடா...?'' என்று கேட்டான்.

''அட, என் உயிர் ஸ்நேகிதன் மனோஜ்... போபாலிலிருந்து போட்டிருக்கான். டாக்டராயிருக்கான் அங்கே...''

''போபால் காஸ்டிராஜடி நடந்தபோது அங்கே இருந்தா?''

''எத்தனை வருஷம் ஓடி விட்டாலும், போபால் என்றவுடன் இந்த டிராஜடிதான் ஞாபகத்திற்கு வருகிறது இல்லையா மணி...'' என்றபடி நான் கடிதத்தைப் பிரிக்க, மணி ஃபைலை எடுத்துக் கொண்டு போனான்.

மனோஜின் கையெழுத்தைப் பார்த்ததும் என்னுள் நட்பின் ஈர நெகிழ்வு ஏற்பட்டது. எல்லோரையும் விசாரித்திருந்தான். பழைய இனிப்பான சம்பவங்கள் பற்றிக் குறிப்பிட்டிருந்தான். கடைசியாக அவன் எழுதியிருந்த செய்தி என் நெஞ்சை உலுக்கியது.

'.....அந்தப் பெண் பெயர் ரூபினா. விஷவாயுக் கசிவால் பாதிக்கப்பட்டவள். இத்தனை வருடங்கள் கழித்தும், அவதிப் பட்டுக் கொண்டிருப்பவர்களுள் ஒருத்தி. அவள் நுரையீரல்கள் நிரந்தரமாய்ப் பாதிக்கப்பட்டு மூச்சு விடுவதே பிரம்மப் பிரயத்தனம் என்ற நிலை. ஆறு வருஷமாய் அவதிப்பட்டுத் தவித்த ரூபினா, சென்ற வாரம் மரணமடைந்தாள். கண்களில் எரிச்சலும், நெஞ்சில் வலியும், ஓயாத வாந்தியுமாகப் போராடிய அவள் இறந்தது நல்லதுதான் என்றாலும், அவள் கணவன் இர்ஃபான் அழுத அழுகைதான் என் நெஞ்சை உறையச் செய்து விட்டது.

இர்ஃபானுக்கு நிச்சயிக்கப்பட்ட ரூபினா, விஷவாயுவினால் பாதிக்கப் பட்டதும், இர்ஃபானின் பெற்றோர் அவளை மருமகளாக ஏற்க மறுத்து விட்டனர். நிச்சயிக்கப்பட்ட திருமணம் நடந்தே ஆக வேண்டும், என்று பிடிவாதமாக ரூபினாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான் இர்ஃபான். எத்தனை உசத்தியான மனசாக அது இருக்க வேண்டும்!

ஒரு குழந்தையைக் கவனிப்பது போல் அவளைக் கவனித்துக் கொண்டான். அவள் படுகிற கஷ்டம் கண்டு கண் கலங்கி நிற்பான். ''சரியாயிடுமா டாக்டர்...?'' என்று நம்பிக்கையோடு கேட்பான். மருந்துகளை ஒழுங்காக உட்கொள்ளச் செய்து, சலிக்காமல் ஆஸ்பத்திரி அழைத்து வந்து, பயப்படாதே நான் இருக்கேன், என்று அரவணைத்து, ஓ! எத்தகைய அன்பாக அது இருந்தது!

ரூபினா இறந்ததும், நஷ்ட ஈட்டுத் தொகை வாங்கித் தர ஏற்பாடுகள் செய்வதாக இர்ஃபானிடம் சொன்னேன்.

இர்ஃபான் அதற்குச் சம்மதிக்க வில்லை. ''என் ரூபினாவே போய் விட்டாள்... இவர்கள் பணத்தைக் கட்டிக் கொண்டு, நான் என்ன செய்யப் போகிறேன்?'' என்று நெஞ்சுடையக் கூறி விட்டான்.

மாக மருவற்ற அந்தத் தூய அன்பினை எண்ணி நான் கரைந்து போய் விட்டேனடா! 'பெண் கறுப்பு, எனக்கு வேண்டாம்'னு, கூசாமல் ஒதுக்கிவிடும் இளைஞர்கள் மத்தியில், ஒரு நோயாளிப் பெண்ணுடன் ஆறு வருஷங்கள் ஒரு தாயைப் போல் பரிந்து ஒருவன் வாழ்ந்திருக்கிறான் என்றால், அது எத்தனை உசத்தியான விஷயம்....'

**சுரீ**ரென்று அடி வாங்கியது போல் உணர்ந்தேன். அதற்கு மேல் கடிதத்தைப் படிக்காமல் அப்படியே உட்கார்ந்து விட்டேன்.

**சா**யங்காலம் வீடு வந்ததும் முதல் வேலையாக —

''அம்மா... எனக்கு விஜயாவையே முடித்து விடுங்கள்...'' என்று மலர்ந்த முகத்துடன் சொன்னேன்.

எல்லோரும் ஆச்சரியம் கலந்த சந்தோஷத்தோடு என்னைப் பார்த்தார்கள்!

# சென்னையிலும் அருள் புரியும் காஞ்சி காமாட்சி



• ராஜகோபுரம்

**ப**ச்சையப்ப முதலியார் ஓர் ஆங்கிலேயரிடம் துபாஷியாகப் பணியாற்றி வந்தார். முதலியாரின் உதவி தேவைப்படும் முக்கியமான தினங்களிலெல்லாம் அவர் அகப்படமாட்டார். வெள்ளைக்காரர் விசாரித்து, பச்சையப்பருக்குக் கச்சி ஏகம்பரிடம் தீவிர பக்தி என்றும் அடிக்கடி தரிசனத்துக்குக் காஞ்சிபுரம் சென்று விடுவதால்தான் முக்கிய தினங்களில் அவரைப் பிடிக்க முடிவதில்லையென்றும் தெரிந்து கொண்டார். உடனே காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலைப் போலவே சென்னையில் கட்டச் செய்து முதலியாரையும் சென்னையில் கட்டிப் போட்டுக் கொண்டாராம் அந்த வெள்ளைக்காரர்.

— சென்னை, ஏகாம்பரேசுவரர் அக்கிரஹாரத்திலுள்ள திருக்கோயிலைப் பற்றிச் சொல்லப்படும் கதை இது.

ஏகாம்பரேசுவரரைத் தொடர்ந்து இப்போது காஞ்சி காமாட்சி அம்மனும் பக்தர்களைப் பரவசத்தில் ஆழ்த்தச் சென்னையிலும் எழுந்தருளியிருக்கிறாள். 'தருமமிகு சென்னையில்' காமாட்சி குடியேறியதன் பின்னணியிலும் ஒரு கதை இருக்கிறது!

**சா**வலி சாஸ்திரி நெடு நாட்களாய்ச் சென்னையில் வசித்து, தமது சார்டர்ட் அக்கவுண்டண்ட் நிறுவனத்தின் மூலம் பெருந்தனம் ஈட்டிய தெலுங்கர். சாஸ்திரிக்கும் அவர் மனைவிக்கும் 1982 ஆம் ஆண்டில் அமர்க்களமாகச் சதாபிஷேகம் நடந்தது. எல்லா விதங்களிலும் நிறைவான வாழ்க்கை வாழ்ந்து விட்ட சாஸ்திரி, சதாபிஷேகத்தையொட்டி காஞ்சி பரமாச்சாரியரைத் தரிசிக்கச் சென்ற போது, தாம் ஈட்டிய பொருளின் கணிசமான பகுதியைச் சிறந்த நற்பணிக்குச் செலவிட விரும்புவதாகக் கூறினார். அப்போதுதான் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், காஞ்சி காமாட்சி அம்மன் கோயிலைப் போலவே சென்னையில் ஒரு கோயில் கட்டும்படி அன்புடன் யோசனை கூறினார். 'காஞ்சியைத் தேடிப் பலர் வந்தாலும், வயது முதிர்ந்தவர்களும் உடல் தளர்ந்தவர்களும் இவ்வளவு தூரம் வருவதற்குச் சிரமப்படுகிறார்கள். இவர்கள் கஷ்டப்படாமல் காமாட்சியைத் தரிசிக்கலாம்' என்று பெரியவர் கூறியதை ஏற்று, உடனே செயலில் இறங்கினார் சாஸ்திரி.

சாவலி கார்டன்ஸ் என்ற பெயரில் சென்னை, அடையாறு பகுதியில் பெரிய நிலப்பரப்பு சாஸ்திரிக்குச் சொந்தமாயிருந்தது. அந்த நிலப்பரப்பில் சாஸ்திரி குடியிருந்த வீட்டுக்கு வெகு அருகிலேயே ஓர் அரச மரத்தின் அடியில், சிறு பிள்ளையார் கோயில் இருந்தது. அதில் கொலுவிருந்த பிள்ளையார், சாஸ்திரிக்கு ரமண மஹரிஷியால் வழங்கப்பட்ட சிலை. பிள்ளையார் கோயிலையும் புதுப்பித்து அதன் அருகிலேயே காமாட்சி அம்மன் கோயிலையும் கட்டுவது என்று முடிவாகியது.

கோயிலின் அமைப்பும் கோபுரமும் விக்ரஹங்களும் அச்சாகக் காஞ்சிபுரத்துக் கோயிலைப் போலவே இருக்கும்படியாகத் திட்டமிட்டு வரைபடங்கள் தீட்டினார் முத்தையா ஸ்தபதி. அவரது அண்ணா கணபதி ஸ்தபதியின் மேற்பார்வையில் உருவாகிய திட்டம் பரமாச்சாரியரின் அங்கீகாரம் பெற்றதும் பணிகள் துவங்கின. கோயில் நிர்மாணத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் காஞ்சி முனிவரிடம் சென்று ஆசியும் அங்கீகாரமும் பெற்று வந்தார் சாவலி சாஸ்திரி.

**ப**ணி தொடங்கிய ஓர் ஆண்டுக்குள் சாவலி சாஸ்திரியின் உடல் நிலை மிகவும் மோசமாகி, படுத்த படுக்கையாகி விட்டார். சிகிச்சை பெற்றுத் திரும்பியதும் உடல்

துவண்ட நிலையிலும் காஞ்சிக்குத்தான் போனார் சாஸ்திரி. கோயில் பணிகள் குந்தகமில்லாமல் முடியும் என்று ஆசி கூறிய பரமாச்சாரியர், சாஸ்திரி தமது வீட்டிலிருந்து எடுத்துச் சென்று காணிக்கையாக அளித்த பசும்பாலில் ஒரு பழத்தைத் தோய்த்து, எடுத்து, அதைச் சாஸ்திரியிடமே கொடுத்தார். காமாட்சியைத் தரிசித்து விட்டுக் கிளம்புவதாகக் கூறிய சாஸ்திரியிடம், உடலை வருத்திக் கொள்ள வேண்டாம் என்று ஆறுதல் கூறி, அவர் குடும்பத்தாரை மட்டும் கோவிலுக்குப் போய் வரச் சொன்னார்.

காஞ்சி முனிவரின் பரிபூரண அன்பும் ஆசியும் கிடைத்த இந்தக் காஞ்சிப் பயணமே சாஸ்திரியின் இறுதிக் காஞ்சிப் பயணமாக முடிந்தது. 1988 இல் சாஸ்திரி காலமானதும் ஓராண்டுக் காலம் கோயில் பணிகள் நிறுத்தி வைக்கப்பட்டன.



தந்தை துவங்கிய பணியைச் சிறப்பாகச் செய்து முடிப்பதில் முனைந்து ஈடுபட்டனர் அவரது மகன்கள். கோயில் பணிகள் எல்லாம் முடிந்து கும்பாபிஷேகத்துக்கு நாள் குறித்ததும் பிரதிஷ்டை செய்யப்பட வேண்டிய கலசங்களும் விக்ரஹங்களும் காஞ்சிக்கு எடுத்துச் செல்லப்பட்டன. அவற்றைக் கிட்டத்தட்ட ஒரு வாரம் தம்மிடமே வைத்திருந்து தியானித்து வந்தார் பரமாச்சாரியார். சென்னைக்குத் திரும்ப எடுத்து வருமுன் அவற்றை ஒவ்வொன்றாகத் தொட்டுத் தமது கண்களில் ஒற்றிக் கொண்டார்.

விக்ரஹங்களுடன் பிரதிஷ்டை செய்யப்படவேண்டிய யந்த்ரங்கள் யாவும் சாஸ்திரியின் மனைவியுடைய நகைகளை உருக்கிச் செய்யப்பட்டிருந்தன. அவற்றையும் தமது திருக்கரங்களால் தொட்டு அருள் செய்து அனுப்பினார் காஞ்சி முனிவர். கேரள அரசு அவருக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்த இரண்டு தேக்குமர துவஜஸ்தம்பங்களுள் ஒன்றை சென்னை காமாட்சி கோயிலுக்கென முன்னமே கொடுத்தருளியிருந்தார் பெரியவர்.



• பாதுகை தந்த பரமாச்சாரியார்

இவ்வளவு அருள் இருந்தும் பெரியவர் கும்பாபிஷேகத்துக்கு வர முடியாது என்ற குறை சாஸ்திரி குடும்பத்தினரை உறுத்தியது. சந்தனக் கட்டையில் பாதுகைகள் செய்வித்தார் சாஸ்திரியின் மகன் ஸ்ரீ கிருஷ்ணா. அவர் வேண்டுகோளுக்கு இணங்கி அந்தப் பாதுகைகளைப் பெரியவர் தமது பாதங்களில் அணிந்து எடுத்துக் கொடுத்தார். கும்பாபிஷேகத்தன்று மானசீகமாகத் தாம் சென்னையில் இருப்பதாகக் கூறி ஆசிகளுடன் சாஸ்திரி குடும்பத்தினரை அனுப்பி வைத்தார்.

**பெ**ரியவர் அணிந்தளித்த பாதுகைகளை முன்வைத்துப் பூஜித்து, கும்பாபிஷேகப் பணிகளைத் துவக்கினார்கள் சாஸ்திரி குடும்பத்தினர். ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் தங்கள் திருக்கரங்களால் அம்பாளைப் பிரதிஷ்டை செய்து சென்ற மாதம் கும்பாபிஷேகம் செய்தனர். கும்பாபிஷேக வேளையில் வானம் பன்னீர் போல் மென் மழை பொழிந்தது பக்தர்களை ஆனந்த பரவசத்தில் ஆழ்த்தியது.



• முத்தையா ஸ்தபதி



சாவலி சாஸ்திரி தம்பதிகள்



• கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார் ஜெயேந்திரர்.

யாகங்களையும் பூஜைகளையும் செய்யக் காஞ்சியிலிருந்து குருக்கள் பலர் வரவழைக்கப்பட்டிருந்தனர். நித்திய பூஜைகளைக் காஞ்சிபுரத்துப் பந்ததியிலேயே செய்வதற்கென காஞ்சி மடத்தில் பயிற்சி பெற்ற இருவர் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளனர்.

ஒன்றரைக் கோடி ரூபாய் செலவில் உருவாகியுள்ள இந்தக் கோயிலில் ஓர் உண்டியல் கூட இருக்காது. 'உண்டியலில் நிறையப் பணம் சேர்ந்தால் அரசின் ஹிந்து சமய அறக்கட்டளைத் துறையின் கட்டுப்பாட்டுக்குக் கோயிலை ஒப்படைக்க வேண்டி வரும். இதைத் தனியார் கோயிலாக எங்கள் மேற்பார்வையில் வைத்துக் கொள்ளவே விரும்புகிறோம்' என்கின்றனர் சாஸ்திரி குடும்பத்தினர்.

**சா**ஸ்திரி குடும்பத்தின் செல்வச் செழிப்பும் பக்தியும் காமாட்சி நிலைய

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்த
படியே, ஓய்வு நேரத்தில்
தபால் மூலம் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பயிற்சிபற்றிய
தகவல் புத்தகத்தையும்,
விண்ணப்ப மனுவையும்
முன் கண்ட முகவரிக்கு
உடனே அனுப்பவைக்கவும்
இப்படிக்கு,
கந்தவேலு

WRITE PIN CODE IN ADDRESS




To
விவேகானந்தா கல்வி நிலையம்
தபால் பெட்டி எண்: 4986
9. மேட்லி ரோடு, தி. நகர்.
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA



* அஷ்டபந்தனத்துக்குத் தேவையான எட்டு திரவங்களை முறைப்படி சேர்த்து இடிக்கிறார்கள்.

மெங்கும் விகசித்திருக்கிறது. முத்தையா ஸ்தபதியின் கைவண்ணமும் அவருடன் பணியாற்றியவர்களின் உழைப்பும் ராஜ கோபுரம் போல் உயர்ந்து நிற்கின்றன.

அத்திவரதன் தங்கை சக்தி சொரூபத்தை
அடியனாற் சொல்லத் திறமோ?
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி உமையே

என்று கவிஞர் பாடிய காமாட்சி அம்மனின் விசாலமான நயனங்களிலிருந்து பெருகும் கருணை வெள்ளம் கரம் குவித்துச் சிரம் தாழ்த்தி வணங்கச் செய்கிறது.

— அலர்மேலு கணேசன்.

வண்ணப்படம் மற்றும் புகைப்படங்கள்: ஸ்ரீஹரி

---

# திருப்பம்

●● எத்தனை காலம்தான் —
சோம்பல் குளிரில்
சுகம் பெற்றுக் கொண்டு
இருப்பது என்று —
நெருப்பு மலர்களால்
நெஞ்சத்தைக் கீறி
அனல் வரிகளை
அச்சிடக் கற்றுக் கொண்டேன்.

●● எத்தனை காலந்தான் —
தென்றலைத் தழுவத்
தவமிருப்பது? என்று —
தென்றலைத் தின்றுவிட்டு,
புயலைப் பிரசவிக்கக்
கற்றுக் கொண்டேன்.

●● எத்தனை காலந்தான் —
சாகப்போகிறோம் என
சித்தாந்தம்
பேசிக் கொண்டிருப்பதென்று —
வாழும் காலத்திற்குள்
வசந்தத்தை வரவேற்கக்
கற்றுக் கொண்டேன்.

●● எத்தனை காலம்தான் —
வானவில்லை வருணிக்க
வார்த்தைகளை
யாசிப்பது என்று
சூரியனை ஆரத்தி
எடுக்குமளவுக்கு
என் வார்த்தைகளுக்கு
வலுவூட்டக் கற்றுக் கொண்டேன்!

— த. கார்த்திகேயன்



# சேலம் விஷ்ணு



இஞ்சினியரிங் கல்லூரித் தேர்வு ஹாலில் பிட் கொடுத்து ஒத்தாசை செய்த எக்ஸாமினரை ஓங்கித் தட்டி நியாயம் கேட்டதன் விளைவாய்க் கல்லூரியை விட்டுக் கார் மெக்கானிக் ஆன நீதிமானாம் கதாநாயகன். மதிப்பாய்த்தான் இருக்கிறது. இந்தக் காரெக்டர் காதலி வேட்டையில் பண்ணும் தகிடு தத்தங்கள், திமிர்த்தனங்கள், ரகசியத்தை மறைக்கக் குடிகார அப்பனுக்கே லஞ்சம் கொடுக்கும் குளறுபடிகள் கோசடிக்கவில்லையோ?

படம் என்றால் ஏதோ டூயட் காட்சி இருக்க வேண்டியதுதான். அதற்காகக் கனவிலும் நனவிலும், காய்ந்தும் நனைந்தும் கலர் கலராய் — அத்தனை டூயட்டுகளா? அதிலும் அடுத்தவரை நிமிர்ந்து பார்க்க முடியாத வல்கர் மூவ்மெண்டுகள்!

தியாகராஜனின் இறுகிப் போன முகம் உணர்ச்சி ரேகைகளுக்கு அப்பாற்பட்டது என்றாலும் வெறியேறிய முறைப்பிலும் குரல் வீச்சிலும் குலைநடுங்க வைக்கிறது.

ரூபிணி, எதிரி வில்லனை மணந்து கொள்ளச் சம்மதித்து, மணமேடை அமைத்து, மாலை அணிவிப்பது போல் பாவனை காட்டி, திடுதிப்பென்று அந்த மாலைக்கடியிலிருந்து துப்பாக்கியை எடுத்து நீட்டும் போது, 'அட!' சொல்ல வைக்கிறார்.

அத்தனை பேரிலும் படத்துக்குக் கொஞ்சம் கௌரவ அந்தஸ்து கொடுக்கிறவர், ஜெயிலர் கீதாதான். கணவன் உயிருக்கு ஆபத்து என்று அறிந்ததும் அவரைக் காப்பாற்றத் துடித்து ஓடுகிற பதற்றம், அதற்குள் காரியம் மிஞ்சிப் போய்த் தன் கண்ணெதிரிலேயே கணவன் கொலை செய்யப் படுவதைக் கண்டு பதறும் ஆற்றாமை — செமை உலுக்கல்.

கவுண்டமணியை வில்லன் அந்தஸ்துக்கு உயர்த்தியிருக்கிறார்கள். சிரிப்பு மூட்டினாலும், சமயத்தில் அழுத்தமான குரூர முத்திரை குத்தத் தவறவில்லை.

காமெடி டிராக்கில் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். அபத்தம் எனவும் ஆபாசமாகவும் அமையுமாறு நன்றாகக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சப்ஜெயிலர் வினு சக்ரவர்த்தி படா லஞ்ச ஊழல் பேர்வழி. கவுண்டமணிக்கு அவர் சோப்புப் போட்டு வாரிச் சுருட்டுவது கலகலப்பு.

தேர்ந்தெடுத்த வெளிப்புறங்களும் காமெராக் கோணங்களும் சூப்பர்.

யார் இந்தப் புது இசையமைப்பாளர் சங்கீதராஜன்? கின்னாரம் கொட்ட வைத்திருக்கிறார்.

முழுக்க முழுக்க வியாபார நோக்கோடு எடுக்கப்பட்ட படம். இருக்கட்டும். அதற்காக, முறைகேடுகளைத் தட்டிக் கேட்க முறையான சட்ட திட்டங்களை நம்பிப் பிரயோசனமில்லை என்று இப்படியொரு வெறியாட்டம் போட்டிருக்க வேண்டுமா?

— பி. எஸ். எஸ்.



# சிறுசேமிப்புத்துறை

## சேமிப்பின் மூலம் பிரமிக்கத்தக்க பரிசுகள்!

சிறுசேமிப்பில் முதலீடு–
வருமானவரியிலிருந்து
பாதுகாப்பு!

**பரிசுப் பொருட்களின் விவரம்:**

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் பரிசு | - காண்டஸா கார் |
| 1 முதல் பரிசு | - மாருதி கார் |
| 5 இரண்டாவது பரிசுகள் | - ஹீரோ ஹோண்டா மோட்டார் சைக்கிள் |
| 10 மூன்றாவது பரிசுகள் | - கலர் டிவி |
| 20 நான்காவது பரிசுகள் | - 165 லிட்டர் ரெப்ரிஜிரேட்டர் |
| 100 ஐந்தாவது பரிசுகள் | - 7½ லிட்டர் பிரஷர் குக்கர் |
| 500 ஆறுதல் பரிசுகள் | - குவார்ட்ஸ் கலர் கடிகாரம் |

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்பு திட்டக் கணக்கு-1987
- பொது சேமநலநிதி
- இந்திரா சேமிப்பு பத்திரம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
- மாதாந்திர வருமானத் திட்டம்
- அஞ்சலக குறித்தகால முதலீடு

மேற்கண்ட சிறுசேமிப்புத் திட்டங்களில் ரூ.1000/- முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கும் வட்டியுடன் இலவச பரிசுக் கூப்பனை பெற்றிடுங்கள். இத்திட்டத்தில் எல்லா தனிநபர்களும் முதலீடு செய்யலாம்.

## தேசிய சேமிப்பு திட்டக்கணக்கு-87ல் ரூ.30,000/- வரை முதலீடு செய்து




## வருமான வரி விலக்கு பெறலாம்.

வருமான வரிச்சட்டம் 80CCA பிரிவின் கீழ் முதலீட்டிற்கு 100% வரிச்சலுகை. இந்த வரிச்சலுகை 80C பிரிவின் கீழ் கிடைக்கும் வரிச்சலுகையுடன் சேர்த்தும் பெறலாம்.

**இயக்குநர், சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209/840003.

அணுகவும்:
- அனைத்து அஞ்சலகங்கள்
- ஆட்சியர் அலுவலகங்கள்
- வட்டாட்சியர் அலுவலகங்கள்
- ஊரக வளர்ச்சித்துறை அலுவலகங்கள்.

DIPR/MS/90/ARIES




## அத்தியாயம் 63
## பினாகபாணியின் வஞ்சம்

பொன்னியின் செல்வரும் குந்தவை தேவி முதலாயினோரும் பாதாளச் சிறைக்குச் சென்று பார்த்த போது அங்கே அவர்கள் வந்தியத்தேவனைக் காணவில்லை. அவனுக்குப் பதிலாக வைத்தியர் மகன் பினாகபாணியைக் கண்டார்கள். பினாகபாணி சுவரில் இருந்த இரும்பு வளையங்களில் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தான். "ஐயையோ! கொலைகாரன் தப்பி ஓடி விட்டான்! பைத்தியக்காரன் தப்பி ஓடி விட்டான்" என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தான். அவனைக் குந்தவை தேவிக்கும் வானதிக்கும் நன்கு நினைவிருந்தது. முதன் முதலில் வந்தியத்தேவனுக்குத் துணையாக அவனையும் கோடிக்கரைக்கு அவர்கள் அனுப்பினார்கள் அல்லவா? பினாகபாணியை விடுதலை செய்யப் பண்ணி விசாரித்த போது அவன் சற்று முன் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகத் தெரியப்படுத்தினான். தப்பி ஓடிப் போனவர்களை விரைவாகத் தொடர்ந்து பிடிக்க வேண்டுமென்றும் ஆத்திரப்பட்டான்.

ஆனால், அவனுடைய வரலாற்றைக் கேட்டவர்கள் அது விஷயத்தில் அவ்வளவு ஆத்திரம் கொள்ளவில்லை. வந்தியத்தேவனுடைய சாமர்த்தியத்தைப் பற்றி மனத்திற்குள் அவர்கள் மெச்சிக் கொண்டதுடன், அச்சமயம் அவன் தப்பி ஓடிப் போனதே ஒருவிதத்தில் நல்லது என்று எண்ணிக் கொண்டார்கள். மணிமேகலை தனது எண்ணத்தை வெளிப்படையாகத் தெரிவிக்கத் தொடங்கிய போது, குந்தவை, அவளைத் தடுத்து, "தங்காய்! பேசாமலிரு! இது பெரிய இராஜாங்க விஷயம். பெண் பிள்ளைகளாகிய நமக்கு அதைப் பற்றி என்ன தெரியும்? உன் மனத்தில் இருப்பதை என்னிடம் தனியாகச் சொல்லு!" என்றாள்.

எல்லாரும் பாதாளச் சிறையின் வாசலில் வந்த போது அங்கே சேநாதிபதி பெரிய வேளாரும் வந்து சேர்ந்தார். சிறையில் ஏதோ தவறு நடந்து விட்டது என்ற செய்தி அவர் காதுக்கு அதற்குள் எட்டியிருந்தது. நடந்தவற்றை அறிந்த போது சேநாதிபதியும் தப்பி ஓடியவர்களைப் பிடிப்பதில் அவ்வளவாகப் பரபரப்புக் காட்டவில்லை. உண்மையில் அவருடைய மனத்திற்குள்ளேயும் வந்தியத்தேவன் மீது சாட்டப்பட்டிருந்த குற்றத்தைப் பற்றிச் சிறிதும் நம்பிக்கை உண்டாகியிருக்கவில்லை. அருள்மொழிவர்மர், குந்தவை தேவி முதலியோர் வந்தியத்தேவனிடம் கொண்டிருந்த அபிமானத்தையும் அறிந்திருந்தார். ஆகையால், கோபங் கொள்வதற்குப் பதிலாக வந்தியத்தேவனுடைய கெட்டிக்காரத்தனத்தைக் குறிப்பிட்டுச் சிரித்தார்.

**அமரர் கல்கி**

''அந்த வாணர் குல வாலிபன் ரொம்ப சாமர்த்தியசாலி! இலங்கை மாதோட்டச் சிறையிலிருந்தும் அவன் இப்படித்தான் ஒரு தடவை தந்திரமாகத் தப்பிச் சென்றான்!'' என்றார்.

வைத்தியர் மகன் குறுக்கிட்டு, ''ஐயா! தப்பி ஓடியவர்களைத் தேடிப் பிடிக்க ஏற்பாடு செய்ய வேண்டாமா?'' என்றான்.

''ஆ! அவர்கள் எங்கே தப்பிச் சென்று விடப் போகிறார்கள்? இந்தக் கோட்டைக் குள்ளேதானே இருக்க வேண்டும்? பார்த்துக் கொள்ளலாம்!'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார்.

பினாகபாணி ஆத்திரத்துடன் ''இல்லை, இல்லை! அந்தக் கொலைகாரனுக்குச் சுரங்கப் பாதை தெரியும். அதன் வழியாக அவன் வெளியேறிப் போய் விடுவான்!'' என்று அலறினான்.

சேநாதிபதி இதனால் கோபம் அடைந்து, ''முட்டாளே! நீ எனக்குப் புத்தி சொல்ல முன் வந்து விட்டாயா? அவர்கள் தப்பிச் செல்வதற்கு நீதானே காரணம்? வேண்டுமென்றே அவர்களுடன் சேர்ந்து நீயே இந்தச் சூழ்ச்சி செய்தாயோ, என்னமோ? இவனைப் பிடித்து மறுபடியும் பாதாளச் சிறையிலே போடுங்கள்!'' என்று பக்கத்தில் நின்ற வீரர்களைப் பார்த்துக் கூறினார்.

பினாகபாணி நடுநடுங்கிப் போனான். ''இல்லை, ஐயா! சத்தியமாக நான் அவர்களுடைய சூழ்ச்சியில் சேர்ந்தவன் அல்ல. முதன் மந்திரி அனுப்பி நான் வந்தேன்!'' என்று முறையிட்டான்.



பொன்னியின் செல்வர் குறுக்கிட்டு, "ஆமாம்; இவன் முதன் மந்திரியின் ஆள் அல்லவா? தக்க காவலுடன் அவரிடம் அனுப்பிச் சேர்த்து விடலாம். முதன் மந்திரியே இவனுக்குத் தக்க தண்டனை கொடுக்கட்டும்!" என்றார்.

அவ்வாறே சேநாதிபதி வைத்தியர் மகனை முதன் மந்திரி அநிருத்தரிடம் கொண்டு போய் ஒப்புவித்து விடும்படி தம்முடைய வீரர்கள் நால்வருக்குக் கட்டளை பிறப்பித்தார்.

முதன் மந்திரி அநிருத்தர் பினாகபாணியிடம் சிறையில் நடந்தவற்றைக் கேட்டு அறிந்த போது அவரும் அவ்வளவாகப் பரபரப்புக் காட்டவில்லை.

அநிருத்தர் எந்த முக்கியமான காரியத்துக்கும் ஒரு ஆளை மட்டும் நம்பி அனுப்புவதில்லை. எங்கேயாவது ஒற்றனை அனுப்பினால், அவனைக் கவனித்துக் கொள்ளப் பின்னால் இன்னொருவனையும் அனுப்பி வைப்பது அவர் வழக்கம். அவ்வாறே இப்போதும் ஆழ்வார்க்கடியானை அனுப்பியிருந்தபடியால் அவர் கவலைப்படவில்லை. ஓடிப் போனவர்களை அவன் பிடித்துக் கொண்டு வருவான், அல்லது அவர்களைப் பற்றிய செய்தியாவது கொண்டு வருவான் என்று நம்பினார். ஓடிப் போனவர்கள் இருவரும் ஒருவழியாக அகப்படாமலே ஓடிப் போய் விட்டால் பல தொல்லைகள் தீர வகை ஏற்படும் என்ற எண்ணமும் அவர் மனத்தில் இருந்தது.

எனவே, பினாகபாணி பாதாளச் சிறையில் நடந்தவற்றைச் சொல்லி விட்டு, "ஐயா! என்னுடன் நாலு ஆட்களை அனுப்பி வைத்தால் நானே அவர்களைத் திரும்பவும் கைப்பற்றி வருகிறேன்" என்று சொன்ன போது, அநிருத்தரும் அவன் பேரில் எரிந்து விழுந்தார்.

"முட்டாளே! காரியத்தை அடியோடு கெடுத்து விட்டாய்! அந்தப் பைத்தியக்காரனைப் பற்றி வெளியில் யாருக்குமே தெரியக் கூடாது என்று அல்லவா உன்னை அனுப்பினேன்? இல்லாவிடில் நானே போய் அவனை அழைத்து வந்திருக்க மாட்டேனா? இப்போது அரண்மனையைச் சேர்ந்த பலருக்கும் அவனைப் பற்றித் தெரிந்து போய் விட்டது. அது போதாது என்று நீ வேறு மறுபடியும் விளம்பரப் படுத்தப் பார்க்கிறாயா? போதும் உன்னுடைய சேவை! நீ ஒற்றன் வேலைக்குச் சிறிதும் தகுதி அற்றவன்! போ! இனி என் முகத்தில் விழிக்காதே! இன்று நடந்தவற்றை யாரிடமும் சொல்லாதே! சொன்னதாகத் தெரிந்தால் உன்னைக் கழுவில் ஏற்றக் கட்டளையிடுவேன்!" என்றார் அநிருத்தர்.

பினாகபாணி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு முதன் மந்திரி வீட்டிலிருந்து வெளியேறினான். அவனுடைய உள்ளத்தில் ஆசாபங்கத்தினால் ஏற்பட்ட குரோதம் கொழுந்து விட்டு எரிந்தது. அந்தக் குரோதமெல்லாம் வந்தியத்தேவன் மீது திரும்பியது. அவனாலேதான் தனக்கு எடுத்த காரியத்தில் தோல்வியும் அபகீர்த்தியும் உண்டாயின. சேநாதிபதியும் முதன் மந்திரியும் தன்னைக் கடிந்து கொள்ளவும் நேர்ந்தது. இவர்கள் எல்லாரும் அலட்சியமாயிருந்தால் இருந்து விட்டுப் போகட்டும். வந்தியத்தேவனைக் கண்டுபிடித்துப் பழி வாங்கும் கடமை தன்னுடையது. பைத்தியக்காரன் தப்பி ஓடிப் போனாலும் போகட்டும்; வந்தியத்தேவனை மட்டும் விடக் கூடாது. கோடிக்கரைக்குப் பிரயாணம் சென்ற நாளிலிருந்து தன்னுடைய விரோதி அவன். கடைசியாக இந்தப் பெரிய தீங்கைத் தனக்குச் செய்திருக்கிறான். அவனைக் கண்டுபிடித்துப் பழிவாங்கியே தீர வேண்டும்!......

இவ்வாறு பினாகபாணி தீர்மானித்துக் கொண்டு தஞ்சைக் கோட்டையை விட்டு வெளியேறினான். வந்தியத்தேவன் கோட்



டைக்குள் இருக்க மாட்டான் என்றும், இரகசியச் சுரங்கப் பாதை வழியாகப் போயிருப்பான் என்றும் அவன் உண்மையிலேயே நம்பினான். ஆனால் சுரங்கப்பாதை எங்கே இருக்கிறதென்றாவது, அதன் வெளி வாசல் எங்கே திறக்கிறதென்றாவது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆயினும் கோட்டைச் சுவரில் எங்கேயோ ஓரிடத்தில் அந்த இரகசியச் சுரங்கப் பாதையின் வெளி வாசற்படி இருக்கத்தான் வேண்டும். சுவர் ஓரமாகப் போய்ச் சுற்றிப் பார்த்தால் ஒரு வேளை கண்டுபிடித்தாலும் கண்டுபிடிக்கலாம். ஏன்? வந்தியத்தேவனும் பைத்தியக்காரனும் வெளியில் வரும் போது கையும் மெய்யுமாக அவர்களைப் பிடித்தாலும் பிடித்து விடலாம்......

இத்தகைய எண்ணத்தினால் பினாகபாணி தஞ்சைக் கோட்டையின் வெளிப்புறத்தில் மதிலை ஒட்டி ஓடிய வடவாற்றின் அக்கரை வழியாகப் போய்க் கொண்டிருந்தான். மதில் சுவரைக் கவனமாக உற்றுப் பார்த்துக் கொண்டே போனான். கொடும்பாளூர் வீரர்கள் சிலர் கையில் தீவர்த்தியுடன் அவ்வப்போது மதிலைச் சுற்றிப் போய்க் கொண்டிருந்தார்கள். வைத்தியர் மகனிடம் இன்னமும் அவன் முதன் மந்திரியின் ஆள் என்பதற்கு அடையாளமான இலச்சினை இருந்தது. ஆகையால், வீரர்கள் எதிர்ப்பட்டால் அவன் அவர்களிடமிருந்து சமாளித்துக் கொண்டு செல்ல முடியும். ஆயினும், அவன் எடுத்த காரியம் அதனால் தாமதம் ஆகும். ஆகையால், தீவர்த்தியுடன் காவல் வீரர்கள் எதிரே வந்தபோதெல்லாம் பாதை ஓரத்தில் மரங்கள் — புதர்களில் மறைந்து நின்று அவர்கள் அப்பால் போனதும் வெளி வந்தான். இப்படி அவன் ஒரு தடவை புதர்களில் மறைந்து கொண்டிருந்த போது அவனுக்குச் சற்றுத் தூரத்தில் இன்னும் இருவர் ஒளிந்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டான். அவர்களில் ஒருவன் கையில் வாள் இருந்தது. தீவர்த்தி வெளிச்சம் புதர்களின் வழியாக வந்து இரண்டொரு கிரணங்கள் அந்த வாளின் மீது பட்டபோது அது ஒளி வீசியது. ஆனால் ஒளிந்திருந்தவர்கள் யார் என்பது தெரியவில்லை.

காவலர்கள் அப்பால் போனதும் அந்த இரு மனிதர்களும் நதிக் கரைக்கு வந்து பினாகபாணி சென்ற திசைக்கு எதிர்ப்பக்கமாக நடந்து சென்றார்கள். பினாகபாணி தன் வழியே சிறிது தூரம் சென்றான். சட்டென்று அவன் மனத்தில் ஓர் ஐயம் உதித்தது. அவர்கள் இருவரும் தப்பி ஓடிய வந்தியத்தேவனும் பைத்தியக்காரனுந் தானோ என்னமோ? ஏன் இருக்கக் கூடாது? — கோட்டை வாசலை நோக்கி அவர்கள் சென்றபடியால், அவனுக்கு முதலில் அச் சந்தேகம் உதிக்கவில்லை. ஆனால் வந்தியத்தேவன் மிக்க தந்திரசாலி; துணிச்சலும் உள்ளவன். ஆகையால் என்ன உத்தேசத்துடன் போகிறானோ, என்னமோ?....

எனவே பினாகபாணியும் திரும்பி அவர்களைச் சற்றுத் தூரத்தில் பின்தொடர்ந்து போனான். ஒருவனுடைய கையிலே வாள் இருந்தபடியால் ஓடிப் போய் அவர்களை எதிர்ப்படவும் விரும்பவுமில்லை. அநாவசியமாக அன்னியன் ஒருவனுடன் சண்டை போடும் சமயம் அதுவல்ல. அவர்கள் தப்பி ஓடியவர்கள்தான் என்று நிச்சயம் தெரிந்து கொண்ட பிறகுதான் எதுவும் செய்ய வேண்டும். அவனுடைய கையில் குட்டையான குத்திட்டி ஒன்று இருக்கவே இருந்தது. அதைத் திடீரென்று உபயோகித்து அவனுடைய ஜன்ம விரோதியைத் தீர்த்துக் கட்டுவதே நல்லது. அதோ வடக்குக் கோட்டை வாசல் தெரிகிறது! அடடே! அங்கே என்ன இவ்வளவு கூட்டமும் ஆர்ப்பாட்டமும்? பல்லக்குகள், தீவர்த்திகள், முன்னும் பின்னும் அரண்மனைச் சேவகர்கள்! — யாரோ முக்கியமானவர்கள் வெளியில் போகிறார்களோ, திரும்பி வருகிறார்களோ தெரியவில்லை!

கடவுளே! இவர்கள் எங்கே? சட்டென்று மாயமாய் மறைந்து விட்டார்களே? குறுக்கு வழியில் புகுந்து விட்டார்கள் போலும்! எங்கே போயிருப்பார்கள்? இராஜ பாட்டைக்குப் போய் விட்டார்களா, என்ன? தப்பி ஓடிய கைதிகள் அவ்வளவு தைரியமாக இராஜபாட்டைக்குச் சென்றிருக்க முடியுமா? இல்லாவிடில் எங்கே போயிருக்க முடியும்?... சேந்தன் அமுதனுடைய நந்தவனக் குடிசை அங்கே சமீபத்தில் இருப்பது பினாகபாணிக்கு நினைவு வந்தது. முன்னொரு முறை வந்தியத்தேவன் அங்கே ஒளிந்திருந்தான் என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது! ஆமாம்! ஆமாம்! அவர்கள் வந்தியத்தேவனும் பைத்தியக்காரனுந்தான். சேந்தன் அமுதன் வீட்டுக்குத்தான் போகிறார்கள். அங்கே இரவு மறைந்து தங்கியிருப்பதற்காகப் போகிறார்கள் போலும்! அல்லது அந்தத் தந்திரசாலியான வந்தியத்தேவன் வேறு என்ன உத்தேசம் வைத்திருக்கிறானோ தெரியவில்லை.




ந்தன் அமுதனுடைய நந்தவனம் இருந்த திசையை நோக்கிப் பினாகபாணி சென்றான். இருட்டில் வழி கண்டுபிடித்துச் செல்வது அவ்வளவு சுலபமாயில்லை. தட்டுத்

தடுமாறி நந்தவனத்தை அடைந்த போது அங்கே சிவிகைகளும் காவலர்களும் இருப்பதைக் கண்டு வியந்தான். என்ன செய்வதென்று தெரியாமல் அவன் தயங்கி நின்ற போது, சிவிகைகள் புறப்பட்டு விட்டன. காவலர்களும் பின்தொடர்ந்து சென்றார்கள்.

பினாகபாணி அந்த நந்தவனத்தில் நாலா புறமும் உற்றுப் பார்த்தான். ஒரு வேலியின் ஓரமாக இரண்டு குதிரைகளின் தலைகள் தெரிந்தன. வைத்தியர் மகனின் ஆர்வம் அதிகமாயிற்று. மெள்ள மெள்ள நடந்து குடிசையை அணுகினான். ஒரு மரத்தினடியில் இருவர் நின்று பேசிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவர்கள் தான் தேடி வந்த ஆசாமிகளாகத்தான் இருக்க வேண்டும். குதிரைகள் இரண்டு ஆயத்தமாக நிற்கின்றனவே, அது எப்படி? அவர்கள் தப்பி ஓடுவதற்கு வேறு யாராவது, பெரிய இடத்தைச் சேர்ந்தவர்கள், இரகசியமாக உதவி புரிகிறார்களா, என்ன? அவர்களைத் தப்ப வைக்கும் சூழ்ச்சியில் இராஜ குடும்பத்தினரே சம்பந்தப்பட்டிருப்பார்களோ? அந்தப் பைத்தியக்காரன் தனக்கு ஏதோ இரகசியங்கள் தெரியும் என்பதாக அலறிக் கொண்டிருந்தானே. அந்த ரகசியங்கள் வெளிப்படக் கூடாது என்பதற்காக ஒரு வேளை இதெல்லாம் நடைபெறுகிறதோ?...

மரத்தின் பின்னால் மறைந்து நின்று பேசுகிறவர்கள் யார் என்று உற்றுப் பார்த்தான். அவர்களில் ஒருவன் பைத்தியக்காரன்தான், சந்தேகமில்லை. அவனுடைய கம்மல் குரலை நன்றாக அடையாளங் கண்டுபிடிக்க முடிந்தது. அப்படியானால், இன்னொருவன் வந்தியத்தேவனாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் அவன்மாதிரி தோன்றவில்லையே? இது என்ன அதிசயம்? இளவரசர் மதுராந்தகரைப் போல அல்லவா தோன்றுகிறது? தலையிலே இளவரசுக் கிரீடம்! தோளில் பீதாம்பரம்! கழுத்தில் முத்து மாலைகள்! கைகளிலும் ஆபரணங்கள்!... மதுராந்தகருக்கும் இந்தப் பைத்தியக்காரனுக்கும் இடையில் என்ன அந்தரங்கப் பேச்சு இருக்க முடியும்?

அது ஏதாவது இருந்து விட்டுப் போகட்டும். தன்னுடைய ஜன்ம விரோதியான வந்தியத்தேவன் எங்கே? பக்கத்திலேதான் எங்கேயாவது இருக்க வேண்டும்; சந்தேகமில்லை. கையிலே வாளுடன் நடந்தவன் அவனேதான்! ஒருவேளை, வேலி ஓரத்தில் குதிரைகளைப் பார்த்தோமே? அவற்றில் ஒன்றின் மீது ஓடுவதற்கு ஆயத்தமாக உட்கார்ந்திருக்கிறானோ? பைத்தியக்காரன் வரவுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறானோ?... ஆகா! அப்படித்தான் இருக்க வேண்டும். அவர்கள் தப்பிச் செல்வதற்குக் காரணமானவர் மதுராந்தகர்தான் போலும்! மதுராந்தகருடைய தூண்டுதலினால்தான் வந்தியத்தேவன் கரிகாலரைக் கொன்றான் போலும்! இப்போது அவர்கள் தப்பித்துக் கொண்டு புறப்படுவதற்கு முன்னால், பைத்தியக்காரனிடம் மதுராந்தகர் ஏதோ செய்தி சொல்லி அனுப்புகிறார் போலும்! கடவுளே! இவையெல்லாம் மட்டும் உண்மையாக இருந்து, தன்னால் அவற்றை உண்மை என்று நிரூபிக்கவும் முடியுமானால்?......



ப்படியெல்லாம் பினாகபாணியின் கோணல் மூளை வேலை செய்தது. எல்லாவற்றுக்கும் குதிரைகளின் அருகில் போய்ப் பார்ப்பது நல்லது. அங்கே ஒருவேளை வந்தியத்தேவன் தனியாக இருந்தால், தன் கையிலிருந்த குத்தீட்டியினால் ஒரு கை பார்க்கலாம். பிற்பாடு, இந்தப் பைத்தியக்காரனைப் பிடித்துப் பயமுறுத்தி உண்மையை அறியலாம்.

மதுராந்தகரும் பைத்தியக்காரனும் பேசிக் கொண்டு நின்ற மரத்திற்கு நேர் எதிரே வேலிக்கு அப்பால் குதிரைகள் நின்றன. அவர்களைத் தாண்டிக் கொண்டு அங்கே போக முடியாது. வழியில் தாமரைக் குளம் வேறு இருந்தது. ஆகையால் குடிசைக்குப் பின்புறத்தை அடைந்து அங்கே வேலியைத் தாண்டிப் போய்க் குதிரைகள் நின்ற இடத்தைச் சேர்வதுதான் நல்லது.

பினாகபாணி அவ்வாறே சென்று குடிசையின் பின்புறத்தை அடைந்த போது அவனுடைய காதில் சேந்தன் அமுதனின் குரலும் பூங்குழலியின் குரலும் விழுந்தன. பூங்குழலியின் மீது கோடிக்கரையில் முதன் முதலாக அவளைச் சந்தித்த போதே பினாகபாணி மோகம் கொண்டிருந்தான். அவள் காரணமாகவே வந்தியத்தேவன் மீது அவனுடைய குரோதம் அதிகமாயிற்று. பிற்பாடு, அவன் மந்தாகினியைக் கைப்பற்றிக் கொண்டு வரப்போனபோது, சேந்தன் அமுதனுக்கும் பூங்குழலிக்கும் ஏற்பட்டிருந்த நட்புரிமையைத் தெரிந்து கொண்டு மனம் புழுங்கினான். சேந்தன் அமுதன் மீதும் அவனுக்குக் குரோதம் உண்டாகியிருந்தது.

இப்போது சேந்தன் அமுதனும் பூங்குழலியும் மகிழ்ச்சி ததும்பிய மலர்ந்த முகங்களுடன் சல்லாபமாகப் பேசிக் கொண்டிருந்ததைப் பினாகபாணி குடிசையின் சிறு பலகணி வழியாகப் பார்த்தான். சேந்தன் அமுதன் மீது அவன் குரோதம் கொழுந்து விட்டு எரிந்தது. இன்னும் சிறிது அருகில் சென்று அவர்களுடைய பேச்சைக் காது கொடுத்துக் கேட்டான். கல்யாணம் செய்து கொண்டு கோடிக்கரை செல்லுவது பற்றிய அவர்கள் பேச்சு அவன் காதில் விழுந்

# புதிய சர்வதேச இரண்டு சீலுடைய பேக்




இரண்டு சீலுடையது

இரண்டு சேலுடையது

மணத்தையும், குணத்தையும்
எப்போதும் உள்ளடக்கியுள்ளது

ஆகவே, நீங்கள் விரும்பிடும்
சக்ரா டீ மணத்தையும்,
ஸ்ட்ராங்கான குணத்தையும்
தன்னகத்தே வைக்கிறது.

CHAKRA

சக்ரா

ப்ரிமியம் டஸ்ட் டீ




SPEER/04/206/90/Tam

தது. கலகலவென்று அவர்கள் இருவரும் சேர்ந்து சிரித்த ஒலி அவனுடைய குரோதக் கனலைப் பொங்கி எழச் செய்தது! சீச்சீ! கடைசியில் இந்த ஊமைப் பூக்காரியின் மகனா பூங்குழலியை அடையப் போகிறான்? அந்த எண்ணத்தைப் பினாகபாணியினால் சகிக்கவே முடியவில்லை. வந்தியத்தேவனையும் பைத்தியக்காரனையும் அவர்களைப் பிடிக்கும் உத்தேசத்தையும் அச்சமயம் அடியோடு மறந்து விட்டான். முதலில், இந்தத் தேவாரம் பாடும் சேந்தன் அமுதனை இந்த மண்ணுலகத்திலிருந்து அனுப்பிவிட வேண்டும். மற்றக் காரியங்களையெல்லாம் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்...



வ்விதம் முடிவு செய்து பலகணிக்கு வெளியே சற்று ஓரமாக நின்று குத்திட்டியைச் சேந்தன் அமுதன்மேல் எறியக் குறி பார்த்தான். தற்செயலாக அந்தஈட்டியையும்அதை ஏந்திய கையையும் மட்டும் பார்த்துவிட்ட பூங்குழலி, 'வீல்' என்று கூச்சலிட்டாள். உடனே சேந்தன் அமுதனும் பலகணிப் பக்கம் திரும்பிப் பார்த்தான்! ஆகா! அவன் மார்பின் பேரில் ஈட்டியை எறியச் சரியான சந்தர்ப்பம்!

பினாகபாணியின் கை ஈட்டியை எறிய ஓங்கிய போது பின்னால் தடதடவென்று காலடிச் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்த போது ஓர் ஆள் வெகு சமீபத்தில் வந்துவிட்டான். இருளில் அவன் யார் என்று தெரியவில்லை. யாராயிருந்தாலும் சரி; தன்னுடைய உத்தேசத்தைத் தெரிந்து கொண்டு தன்னைப் பிடிப்பதற்கே ஓடி வருகிறான். சேந்தன் அமுதன்மீது எறிவதற்கு ஓங்கிய ஈட்டியை ஓடி வந்தவன் மீது செலுத்தினான். வந்தவன் கீழே விழுந்தான்.

அதே சமயத்தில் இரண்டு குதிரைகள் புறப்பட்ட சப்தம் கேட்டது. அவர்கள் வந்தியத்தேவனும் பைத்தியக்காரனாகவுமே இருக்க வேண்டும். அப்படியென்றால் இருட்டில் தன்னைத் தடுக்க வந்து தன் ஈட்டிக்கு இலக்கானது இளவரசர் மதுராந்தகராயிருக்கக்கூடும்!... இந்த எண்ணங்கள் மின்னல் வேகத்தில் பினாகபாணியின் உள்ளத்தில் தோன்றி அவனுக்குப் பயங்கரத்தை உண்டாக்கின.

குடிசைக்கு உள்ளேயிருந்து 'ஆகா!' 'ஐயோ!' என்ற குரல்கள் எழுந்தன. கதவைத் திறந்து கொண்டு வெளியில் யாரோ வரும் சப்தமும் கேட்டது.

பினாகபாணி ஓட்டம் பிடித்தான். அங்கிருந்து தப்பி ஓடுவதுதான் அப்போது முதன்மையாக அவன் செய்ய வேண்டிய காரியம். குதிரைகள் மீது ஓடியவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடிப்பது இரண்டாவது காரியம். தலைகால் தெரியாமல் பினாகபாணி விழுந்து அடித்து ஓடினான்.



ல கண நேரத்துக்கெல்லாம் பூங்குழலியும் சேந்தன் அமுதனும் விளக்குடன் வெளியில் வந்தார்கள். வந்தியத்தேவன் ஈட்டியால் குத்தப்பட்டு இரத்த வெள்ளத்தில் விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். அவர்கள் அடைந்த பயங்கரத்தையும் துயரத்தையும் சொல்லி முடியாது. மிக்க பரிவுடன் அவனை இருவரும் பிடித்துத் தூக்கிக் கொண்டு போய்க் குடிசைக்குள் சேர்த்தார்கள். அவன் இறந்து விடவில்லை என்று அறிந்து சிறிது ஆறுதல் பெற்றார்கள்.

வாணி அம்மை முன்னொரு தடவை கந்தமாறனுக்குச் செய்த பச்சிலை வைத்தியத்தை இன்று காயம் பட்ட வந்தியத்தேவனுக்குச் செய்யும்படி நேர்ந்தது.

## அத்தியாயம் 64

## "உண்மையைச் சொல்!"



ழ்வார்க்கடியானை வந்தியத்தேவன் கட்டிப் போட்ட படகு ஆற்றோட்டத்தோடு சிறிது தூரம் மிதந்து சென்று கரையிலே ஒதுங்கியது. ஆற்று வெள்ளத்தில் தள்ளப்பட்ட வீரர்கள் இருவரும் தட்டுத் தடுமாறிக் கரை சேர்ந்து அந்தப் படகு ஒதுங்கியிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஆழ்வார்க்கடியானையும் மற்றொருவனையும் கட்டவிழ்த்து விட்டார்கள். ஆனால் ஆழ்வார்க்கடியான் படகிலிருந்து இறங்கவில்லை. அவன் படகிலேயே கட்டுப்பட்ட மாதிரியே இருந்து கொண்டு மற்றவர்களை மறைவில் இருக்கும்படி சொன்னான்.

உண்மையென்னவென்றால், வந்தியத்தேவனும் கருத்திருமனும் தப்பித்துப் போய்விட வேண்டுமென்பதே ஆழ்வார்க்கடியானுடைய நோக்கமாயிருந்தது. முதன் மந்திரியின் விருப்பமும் அதுவே என்பதை அவன் தெரிந்து கொண்டிருந்தான். அவ்விருவரும் அச்சமயம் தஞ்சையில் இருப்பதால், பழைய சம்பவங்கள் பலவற்றைக் குறித்து

ஆராய்ச்சி நடத்த வேண்டியதாக ஏற்படும். வந்தியத்தேவன் குற்றமற்றவன் என்பது பற்றி முதன் மந்திரிக்கும் ஆழ்வார்க்கடியானுக்கும் சந்தேகமே இல்லை. ஆயினும், அவன் மீது விசாரணை நடத்துவதனாலேயே பல சங்கடங்கள் ஏற்படும்; பலர் மனவருத்தம் அடையும்படி நேரிடும். அந்தப் பேச்சு மக்களின் காதுக்கு எட்டும்படி செய்வதே கேடாக முடியும். அருள்மொழிவர்மர் ஓர் அருமை நண்பனை இழக்கவும் சோழ ராஜ்யம் ஒரு சிறந்த வீர ராஜ தந்திரியை இழக்கவும் நேரிடும். வந்தியத்தேவனைப் பற்றிக் குந்தவையின் மனோநிலையையும், மணிமேகலையின் வெளிப்படையான ஆர்வத்தையும் முதன் மந்திரி அறிந்திருந்தார். எல்லாவற்றையும் உத்தேசித்துத்தான் வந்தியத்தேவன் தப்பி ஓடுவதற்கு உதவி செய்வதே அச்சமயம் உசிதமானது என்று தீர்மானித்தார்.

சேந்தன் அமுதனுடைய நந்தவனத்தில் குதிரைகளைக் கண்டுபிடித்த பிறகு வந்தியத்தேவனும் கருத்திருமனும் இந்த வடவாற்றின் கரையோடுதான் பிரயாணம் செய்வார்கள் என்று திருமலை நம்பி எதிர்பார்த்தான். கருத்திருமன் கூறியது போல், அந்த ஆற்றங்கரையோடு சென்றால், பாமணி நதியில் அது கலக்கும் இடம் வரையில் போகலாம். கோடிக் கரை வழியில் பாதி தூரம் சென்றாகி விடும். ஆகவே அந்த வழியிலேதான் அவர்கள் வருவார்கள். போகும் போது அவர்களைத் தடுத்து நிறுத்தி வந்தியத்தேவனிடம் ஒரு செய்தி சொல்லி அனுப்ப வேண்டுமென்று ஆழ்வார்க்கடியான் எண்ணிக் கொண்டு அங்கு காத்திருந்தான்.

அவன் எதிர்பார்த்ததைக் காட்டிலும் கொஞ்சம் நேரம் அதிகமாக ஆகி விட்டது. "நாம் எண்ணியது தவறு; வேறு வழி போயிருக்க வேண்டும்; அல்லது ஏதேனும் எதிர்பாராதது நேர்ந்திருக்க வேண்டும்" என்று தீர்மானித்துத் திருமலை படகிலிருந்து கரையில் இறங்க எத்தனித்த போது, தூரத்தில் குதிரைகளின் காலடிச் சப்தம் கேட்டது. எனவே, மறுபடியும் கட்டிப் போடப்பட்டவனைப் போல் கிடந்தான்.

குதிரைகள் நெருங்கி வந்ததும், "ஓகோ! யார் அங்கே? கொஞ்சம் நில்லுங்கள்! என்னைக் கட்டவிழ்த்து விட்டுப் போங்கள்!" என்று கூவினான்.

ஆயினும் குதிரைகள் நிற்காமலே சென்றன. முதலில் வந்த குதிரையின் மேல் இருந்தவன் கருத்திருமன்தான் என்பதைக் கண்டான். எனவே, இரண்டாவது குதிரை நெருங்கிய போது "வந்தியத்தேவா! வந்தியத்தேவா! கொஞ்சம் நில்லு!" என்று பெருங் கூச்சலிட்டான்.

இரண்டாவது குதிரையும் நிற்காமல் போயிற்று. அப்போது அதன் மேலிருந்தவனை ஆழ்வார்க்கடியான் பார்த்தான்; கரை காணாத அதிசயத்தில் ஆழ்ந்தான். "என் கண்களில் ஏதோ கோளாறு இருக்கிறது; என் அறிவு என்னை மோசம் செய்கிறது" என்றான்.



வனைக் கடந்து அப்பால் சென்ற குதிரைகள் சிறிது தூரம் போன பிறகு நின்றன. ஒரு குதிரை மட்டும் திரும்பி வந்தது. அதன் மேலிருந்து கருத்திருமன் இறங்கினான்; படகின் அருகில் வந்தான். "பாவம்! இன்னுமா கட்டுப்பட்டிருக்கிறாய்? எங்களுக்கு எவ்வளவோ பெரிய உதவி செய்தாய்! அதற்குப் பிரதியாக உன்னைக் கட்டவிழ்த்து விட்டாவது போகிறேன். ஆனால் உன் தந்திரம் எதையும் என்னிடம் காட்டாதே!" என்று சொல்லிக் கொண்டே அவன் குனிந்த போது, திருமலை திடீரென்று கரையில் பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்துக் கீழே தள்ளி விட்டான்.

இதைச் சிறிதும் எதிர்பாராத கருத்திருமன் சிறிது நேரம் திகைத்துச் செயலிழந்து கிடந்தான்.

பிறகு, "ஐயோ! அப்பா! என்னை விட்டு விடு! உனக்குப் புண்ணியம் உண்டு. நல்லது செய்ய வந்தவனுக்கு இப்படி நம்பிக்கைத் துரோகம் செய்யலாமா? அதோ உன் சிநேகிதன் வந்தியத்தேவன் காத்திருக்கிறான். ஆம்; அவன் உன்னைத் தன் அருமை நண்பன் என்று பாராட்டிக் கொண்டிருக்கிறான். இங்கு வந்து உன் காரியத்தைப் பார்த்தால் என்ன நினைப்பான்? நீ உயிரோடு தப்ப முடியாது! என்னை விட்டு விடு, அப்பனே, விட்டு, விடு!" என்று பரிதாபமாகப் புலம்பினான்.

ஆழ்வார்க்கடியான், "அடே! எவ்வளவு துணிச்சலாகப் பொய் சொல்லுகிறாய்? அந்தக் குதிரையின் மேல் இருப்பவன் யார்? உண்மையைச் சொல்லு! சொன்னால் விட்டு விடுகிறேன். இல்லாவிட்டால் அடுத்த நிமிஷம் உன் உயிர் உடம்பில் இராது!" என்றான்.

"ஆம், ஆம்! பொய்தான் சொன்னேன். உன்னை ஏமாற்ற முடியாதுதான். அந்தக் குதிரையில் இருப்பவன் வந்தியத்தேவன் அல்ல; இளவரசர் மதுராந்தகர். என்னை விட்டு விடு! அவரிடம் உனக்கு வேண்டிய பரிசுகள் வாங்கித் தருவேன்!"

"சரி, சரி! பரிசுகள் இருக்கட்டும்! வந்தியத்தேவன் எங்கே?"

''அந்த நந்தவனக் குடிசையில் குதிரையிலிருந்து இறங்கிப் போனான். அப்புறம் அவனைக் காணவில்லை.''

''நீங்கள் எங்கே போகிறீர்கள்?''

''வந்தியத்தேவனுடன் நான் போக உத்தேசித்த இடத்துக்குத்தான்.''

''அதாவது இலங்கைத் தீவுக்கு.''

''ஆமாம்!''

''மதுராந்தகர் எதற்காக இலங்கைக்கு வருகிறார்?''

''எனக்கு என்ன தெரியும்? அவரைக் கேள்! என்னுடன் வருகிறேன் என்று கிளம்பி வருகிறார்.''

ஆழ்வார்க்கடியான் கருத்திருமனுடைய நெஞ்சை ஒரு அமுக்கு அமுக்கி, ''உண்மையைச் சொல்! மதுராந்தகன் யாருடைய மகன்!'' என்று கேட்டான்.

''இது என்ன கேள்வி? செம்பியன் மாதேவியின்... இல்லை, இல்லை! நெஞ்சை அமுக்காதே! என் உயிர் போய் விடும்! ஊமை மந்தாகினியின் மகன்.''

''மதுராந்தகனின் தகப்பன் யார்? உண்மையைச் சொல்! இல்லாவிட்டால், உயிரோடு தப்ப மாட்டாய்!''

கருத்திருமன் இதற்குப் பதில் மிக மெல்லிய குரலில் சொன்னான்.

''நல்லது; பிழைத்தாய்! கடைசியாக இன்னும் ஒன்று மட்டும் சொல்லி விடு! சேந்தன் அமுதன் யாருடைய மகன்?''

''என்னை ஏன் கேட்கிறாய்? நீதான் முன்னமே தெரிந்து கொண்டாயே?''

''கண்டராதித்தர் – செம்பியன் மாதேவியின் மகன்தானே?''

''ஆமாம்; ஆனால் அவன் இன்று உயிரோடிருப்பதற்கு நான்தான் காரணம். செவிடும் ஊமையுமாகிய வாணி அந்தக் குழந்தை செத்துப் போய் விட்டதென்று எண்ணிப் புதைக்கப் பார்த்தாள். குழந்தை அழும் குரலைக் கேட்டு நான் காப்பாற்றினேன். அதற்காகவாவது என்னை இப்போது உயிரோடு விட்டு விடு!''

''உண்மையில், அதற்காகவேதான் உன்னை இப்போது உயிரோடு விடுகிறேன்!'' என்று சொல்லி விட்டு ஆழ்வார்க்கடியான் எழுந்தான்.

கருத்திருமன் பாய்ந்து ஓடிக் குதிரை மீது ஏறிக் கொண்டான்.

இரண்டு குதிரைகளும் அந்த மழைக் கால இருட்டில் ஆற்றங்கரையோடு பாய்ந்து சென்றன.

(தொடரும்)

# புற்றுநோயை எதிர்த்து ஒரு புனிதப் போர்!



* டாக்டர் நளினி

ஜேம்ஸ் பேக்கர் என்ற அமெரிக்கருக்கு கான்ஸர் நோய்! அமெரிக்காவிலுள்ள ஃபோர்ட் மருத்துவமனையில் சேர்ந்து சிகிச்சை பெற்றார். உடம்பை உலுக்கி எடுக்கும் மிகத் தீவிரமான சிகிச்சை! அதன் இறுதியில் சில வாரங்கள் டாக்டர்களின் கண்காணிப்பிலேயே இருக்க வேண்டிய நிர்ப்பந்தம். மருத்துவ மனையை விட்டு வெளியேற முடியாது. ஜேம்ஸ் பேக்கருக்கோ தமது சொந்தத் தொழில் தொடர்பான பணிகள் கவனிப்பாரின்றிச் சீர்குலையுமே என்று கவலை வந்து விட்டது. மருத்துவர்களின் அனுமதியுடன் தமது கம்ப்யூட்டர் டெர்மினலை ஆஸ்பத்திரியிலேயே கொண்டு வந்து வைத்துக் கொண்டு, அதில் டெலிபோனை இணைத்துக் கொண்டு தமது வேலைகளையெல்லாம் படுக்கையிலிருந்தபடியே செய்தார்!

ஜேம்ஸ் பேக்கருக்குச் சிகிச்சை அளித்தவர் டாக்டர் நளினி ஜானகிராமன். சென்னை ஸ்டான்லியில் மருத்துவம் படித்துவிட்டு, அமெரிக்காவில் மேல்படிப்பு படித்து, தற்போது ஃபோர்ட் மருத்துவ மனையில் பணியாற்றுபவர். ஆயிரம் படுக்கைகள் கொண்ட இந்த மருத்துவ மனையின் கான்ஸர் பிரிவில் மிகச் சிக்கலான **bone marrow transplant**களைச் (எலும்புச் சாறு மாற்று அறுவைச் சிகிச்சை) செய்து வருகிறார். ஃபோர்ட் மருத்துவ மனையின் பன்னிரண்டு கான்ஸர் ஸ்பெஷலிஸ்ட் மருத்துவர்களுள் ஒருவரான டாக்டர் நளினியைச் சந்தித்தோம்.

''ஜேம்ஸ் பேக்கரின் நெஞ்சுறுதி என்னை மிகவும் கவர்ந்தது. 'உயிரோடு இருக்கும் வரை சுறுசுறுப்பாக இருக்கவே விரும்புகிறேன்' என்று கூறுவார் அவர். அவரைப் பரிசோதிக்கச் செல்லும்போதெல்லாம் 'நான் உங்களைப் பார்க்க அனுமதி உண்டா?' என்று விளையாட்டாகக் கேட்டுக் கொண்டே போவேன். அவரும் தமது வேலையைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டு 'யெஸ் ஐ'ம் ரெடி நௌ' என்று திரும்புவார்.

''அனேகமாக எல்லா அமெரிக்கர்களும் நோய்க் காப்பு இன்ஷுரன்ஸ் செய்து கொண்டிருப்பார்கள். அதனால் சிகிச்சை செலவு பற்றிய கவலை கிடையாது. நோயாளிகள் உற்சாகமாக இருப்பதற்குப் பாதி காரணம் இது. மற்றப் பாதி காரணம் அவர்களுடைய இயல்பான மனோதிடம்.

''ஆனால், இன்ஷுரன்ஸ் பாதுகாப்பு இல்லாத கான்ஸர் நோயாளிக்கும் ஒரு

* கதிர் வீச்சு சிகிச்சை — புற்றுநோய் எதிர்ப்புப் பணியில் பல பிரிவுகளில் ஒன்று.



முறை சிகிச்சை அளிக்க நேர்ந்தது. கிம்பர்லி கெம்ப் என்ற அந்தச் சிறுமி ஒரு சிறிய கிராமத்தைச் சேர்ந்தவள். அவள் பெற்றோரால் சிகிச்சை செலவைத் தாங்க முடியாத நிலை. சொந்த வீட்டையும் நில புலன்களையும் விற்றுப் பணத்தைக் கட்டி விடுகிறோம் என்று கூறி கிம்பர்லியை எங்கள் மருத்துவமனையில் கொண்டு சேர்த்தனர். அவளுக்குக் காலில் புற்று நோய். அவள் சிகிச்சைக்கென அவள் கிராமமே ஒன்று திரண்டு பணம் சேர்த்தது. ஒரு திருவிழா போல் பல நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து கட்டணம் வசூலிக்கப் பட்டது. கிம்பர்லியின் நண்பர்களும் தோழி களும் 'ஐ லவ் கிம்' என்ற வார்த்தைகள் பொறித்த 'பாட்ஜு'களைத் தயார் செய்து விற்றனர். எங்கள் மருத்துவமனைச் சிப்பந்திகள் கூட ஆளுக்கு ஒரு டாலர் கொடுத்து, அந்த 'பாட்ஜை' வாங்கிக் கொண்டனர். பல வழிகளிலும் பணம் சேகரித்து முப்பதாயிரம் டாலர் மருத்துவச் செலவை அந்த கிராம மக்கள் கூட்டாக ஏற்றுக் கொண்டனர். சிகிச்சையில் குண மடைந்த கிம்பர்லி, ஆறு மாதங்கள் சகஜ மான வாழ்க்கை வாழ்ந்தாள். அதன் பிறகு அவளுக்கு மீண்டும் கான்ஸர் வந்த போது அவளைக் காப்பாற்ற முடியவில்லை. இந்த நிகழ்ச்சி என் மருத்துவப் பணிக் காலத் தில் நடந்த மறக்க முடியாத நிகழ்ச்சிகளுள் ஒன்று'' என்றார் டாக்டர் நளினி.

**எ**லும்புச் சாறு மாற்று அறுவைச் சிகிச்சை பற்றிக் கேட்ட போது டாக்டர் நளினி கூறினார்:

''லூகீமியா (ரத்த புற்றுநோய்) மற்றும் லிம்ஃபோமா (**lymphnodes** என்ற உறுப்பு களில் வரும் புற்று நோய்) வகை கான்ஸர் களுக்குக் 'கீமோதெரபி' என்ற கதிர் வீச்சுச் சிகிச்சை அளிக்கிறோம். நோயின் தீவிரத் தைப் பொறுத்துக் கதிர்வீச்சு மிக வீரிய மானதாக இருக்கும். இந்த வீரியம் மிக்கக் கதிர்கள் கான்ஸர் செல்களை அழிக்கும் அதே நேரத்தில் எலும்பில் உள்ள எலும்புச் சாறும் (**bone marrow**) இக் கதிர்களால் தாக் கப்பட்டுப் பழுதடையலாம்.

''எலும்புச் சாறுதான் உடலின் முக்கிய மான ரத்த உற்பத்தி நிலையம். இந்த ரத்த உற்பத்தி நிலையம் கான்ஸர் சிகிச்சைக் கதிர் வீச்சால் தாக்குண்டு பழுதடையும் போது உடலில் ரத்த உற்பத்தி படு வேகமா கக் குறைந்து, நோயாளியின் உயிருக்கே ஆபத்து ஏற்படுகிறது.

''இந்த ஆபத்தைத் தவிர்ப்பதற்காகத் தான் நோயாளியின் இடுப்பு எலும்பில் ஒரு குழாயைச் செலுத்தி, எலும்புச் சாறின் ஒரு பகுதியை உறிஞ்சி வெளியே எடுக்கிறோம். (உடலின் வேறு பகுதியிலிருந்து எலும்புச் சாறை வெளியே எடுக்க முடியாது). வெளியே எடுத்த எலும்புச் சாறை உடனடி யாகத் தக்க முறையில் பதப்படுத்தி திரவ நைட்ரஜன் டாங்குகளில் பாதுகாப்பாக வைக்கிறோம்.

''இதன் பிறகு நோயாளிக்கு மிக மிகக் கடுமையான கதிர்வீச்சுச் சிகிச்சை அளிக்கப்படுகிறது. அவர் உடல் தாங்கும் அளவுக்குச் சிகிச்சை அளித்த பிறகு, நாங்கள் வெளியேற்றி வைத்துள்ள எலும் புச் சாறை, தோள்பட்டை அருகே மீண்டும் அவர் உடலுக்குள் செலுத்துகிறோம். கதிர் வீச்சின் விளைவாக நோயாளியின் உடலில் இருந்த எலும்புச் சாறு பாதிக்கப்பட்டு ரத்தத்தின் வீரியம் குறைந்தாலும் நாங்கள் பாதுகாத்து வைத்துள்ள அவருடைய எலும்புச் சாறையே மீண்டும் உடலுக்குள் செலுத்தும் போது அது வெகு விரைவில் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்து தன்னுடைய ரத்த உற்பத்திப் பணியை ஆரம்பித்து விடுகிறது. நான்கு முதல் ஆறு வாரங்களில் நோயாளியின் உடலில் புது ரத்தம் தேவையான அளவு உற்பத்தியாகி விடுகிறது. அதுவரை மிகவும் கவனமாக அவரைக் கண்காணிப்போம்.

''இத் துறையில் மேலும் பல நுண்ணிய ஆராய்ச்சிகள் செய்ய ஃபோர்ட் ஸ்தாபனம் எனக்கு நிறையப் பொருளுதவியும் ஆராய்ச் சிக் கூட வசதிகளும் வழங்கியுள்ளது'' என்றார் டாக்டர் நளினி.

புற்று நோயை வெற்றி கொள்ள நடக்கும் புனிதப் போரில் விஞ்ஞானிகளின் ஒரு மாபெரும் சைனியம் ஈடுபட்டிருக்கிறது. அதில் ஒரு பட்டாளத்துக்குத் தளபதியாக விளங்கும் நளினி நம்மவர் என்பதில் நமக்கு ஒரு பெருமைதானே!

**—சீதா ரவி**



''இந்த ஓட்டலில் நிறைய பேர் காசில் லாமல்தான் சாப்பிடுவாங்களோ?''

சர்வர்: எப்படிக் கண்டுபிடிச்சீங்க?

''அதோ அந்த போர்டைப் பார்த்துத் தான்!''

—எஸ். சுந்தரராஜ்

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் அறிவிப்பு. ஸ்ரீ வரதாராஜ பெருமாள் மூலவர் புண்ணிய கோடி விமான துவக்க விழா.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் கோல்டன் ஜூபிலி டிரஸ்ட், கோசாலை பராமரித்தல், ஆஸ்பத்திரிக்கு உதவுதல், வேத சாஸ்த்ர பாடசாலைகளை ரக்ஷித்தல், கோவில் திருப்பணிகளுக்கு உதவி செய்தல் ஆகிய பணிகளின் படி

''கச்சிதனிற் கண்கொடுக்கும் பெருமானாம்
அத்திகிரி அருளாளப் பெருமானின்''

ஸ்ரீ மூலவர் புண்ணிய கோடி விமானத்தினை திருப்பணி செய்ய பல லட்ச ரூபாய் செலவில் மேற்கண்ட டிரஸ்ட் வாயிலாக ஏற்பாடாகியுள்ளது. ஆஸ்தீக அன்பர்களும், வைஷ்ணவ பெருமக்களும் இந்த திருப்பணி கைங்கர்யத்தில் பங்கு கொள்ளலாம். நிதி உதவி அளிப்பவர்களுக்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகளின் அருட் பிரசாதம் அனுப்பிவைக்கப்படும். DD ஆகவோ, செக் ஆகவோ அனுப்புபவர்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்,
கோல்டன் ஜூபிலி டிரஸ்ட்,
சங்கர மடம்,
No.1, சாலை தெரு,
காஞ்சிபுரம் : 631 502.

நன்கொடைக்கு 80G வருமானவரி விலக்கு உண்டு.

# மணல்வெளி மான்கள்

''நான் கெணத்துக்குள்ளே இருந்தேன்!''

''எவ்வளவு நேரம் இருந்தே?''

''டைம் தெரியலே. ரெண்டு மணி நேரத்துக்கு மேலே இருக்கலாம்.''

''மேலே ஏறி வந்தப்போ என்ன பார்த்தே?''

கௌதம் விழிப்பானான். இந்தக் கேள்வி ஒரு பொறி மாதிரி. வாய் தவறினால் சிக்கிக் கொள்ள வேண்டியதுதான்.

''கூட்டம் கலைஞ்சு யாராரோ பிரிஞ்சு போய்ட்டிருந்தாங்க.''

''யார் யார்னு சொல்ல முடியுமா?''

மீண்டும் இன்ஸ்பெக்டர் பொறி வைக்கிறார்.

''தூரத்திலே முக அடையாளம் தெரியலே.''

''அப்புறம்?''

''ஆதி வந்தான்.''

''என்ன சொன்னான்?''

கௌதம் ஒரு வினாடி யோசித்தான்.

''என்ன தகராறுன்னு கேட்டேன்! அதெல்லாம் ஒனக்கு எதுக்குன்னு பேச்சைக் கத்தரிச்சான். நான் வற்புறுத்தலே. மோட்டார்ரிப்பேர் ஆயிடுச்சுன்னேன். தட்ஸ் ஆல்.''

இன்ஸ்பெக்டர் கதை கேட்கிற மாதிரி அவன் முகத்தையே பார்த்துக் கொண்டு தம் மோவாயில் **கைவைத்தார். தான்** சொன்னதை அவர் நம்பினாரா இல்லையா என்று புரிந்து கொள்ள முடியவில்லை.

''சாட்சி சொல்ல வேண்டி வரும்னு பயப்படறியா?''

''உண்மைக்கு விரோதமா என் சாட்சியம் பயன்படக் கூடாது.''

''ஸோ, நீ எதையோ மறைக்கறே?''

''நாட் அட் ஆல்!''

இருவர் பார்வைகளும் சந்தித்தன. கௌதமின் கண்களில் ஓர் உறுதி ஒளி வீசிற்று. என்னவானாலும் அதைச் சந்திப்பது என்ற உறுதி.

''எது உண்மை? சொல்லு... உனக்கு ஏதாவது தெரியுமா?''

கௌதம் நிதானித்துச் சொன்னான்.

''ஒன்று மட்டும் எனக்குத் தெரியும்...''

''என்னது?''

''ஆதி மாசிலா குடிசைக்கு நெருப்பு வைக்கலே.''

''எப்படி அவ்வளவு நிச்சயமாச் சொல்றே?''

''ஆதியை எனக்குத் தெரியும்.''

''எவ்வளவு நாளா?''

''ஏழெட்டு வருஷமா.''

''எப்படிப் பழக்கம்?''

''கூடப் படிச்சவன். நல்லவன். எந்தத் தப்புத் தண்டாவுக்கும் போகாதவன்.''

''ஐ ஸீ...''

''யாராவது ஒருத்தர் அடிச்சா வாங்கிக்குவானே தவிர திருப்பிக் கொடுக்க மாட்டான்.''

''கொலை பண்ணிடுவேன்னு நேத்து மெரட்டியிருக்கான். சாட்சி இருக்கு?''

''யாரு?''

''தட்ஸ் நன் ஆஃப் யுவர் பிஸினஸ்.''

குப்பென்று கௌதமின் உடம்பில் சூடேறிற்று.

''ஸோ... நீ உன் சினேகிதனைக் காப்பாத்த முயற்சி பண்றே...''

''ஸாரி. ஒரு நிரபராதியை நான் நிரபராதின்னு சொல்ல வர்றேன்.''

''அவன் சூப்பர் மார்க்கெட்லே கெரஸின் வாங்கியிருக்கான். பாலத்து மேலே கெரஸின் டின்னோட அரை மணி நேரம் உட்கார்ந்திருந்திருக்கான். நேத்து காலைல ஒரு தகராறிலே, கொலை பண்ணிடுவேன்னு மாசிலாவை மெரட்டியிருக்கான்...''

கௌதம் தலைகுனிந்து இன்ஸ்பெக்டரின் ஷூ மேஜைக்கடியில் பளபளப்பதைக் கவனித்தான்.

''இதெல்லாம் வெறும் சந்தர்ப்பங்கள் ஸார்! ஆதிக்கு ஒருகாலும் ஒரு குடியிருக்கிற குடிசைக்கு நெருப்பு வைக்கிற கொடூரப் புத்தி கிடையாது.''

''ஒரு சந்தர்ப்ப வேகத்திலே அப்படித் தோணிடலாம். இல்லையா?''

''அது மனிதர்களைப் பொறுத்தது.''

''ஆல்ரைட் கௌதம்! மறுபடியும் நீ ஸ்டேஷனுக்கு வர வேண்டியிருக்கும். ஆமா, நீ இப்ப ஏன் வந்தே?''

''ஆதியை லாக்கப்பிலே பார்த்துட்டுப் போகணும்னு.''

''ஐ ஸீ... ஸெவன் நாட் ஸெவன், இவரை லாக்கப்புக்குக் கூட்டிக்கிட்டுப் போ!''

இன்ஸ்பெக்டருக்குத் தன்னை ஜெயிக்க முடியாத ஆதங்கம் இருப்பதாகக் கௌதம் உணர்ந்தான்.

**லா**க்கப்பின் கம்பியைப் பிடித்துக் கொண்டு ஆதி நின்றான். எங்கே உடைந்து திடீரென்று கதறி விடுவானோ என்று கௌதம் பயந்தான். முகத்தில் அப்படி ஒரு நிராதரவு.

வையவன்




நல்லவேளை. ஒன்றும் ஆகவில்லை.

"என்ன ஆதி இது?"

"நீ நம்பறியா?"

"நிச்சயம் இல்லே."

"நெஜம்மா சொல்லு."

"நெஜம்மா!"

ஆதி கம்பி வழியே கைநீட்டினான். கௌதம் பிடித்தான். உறுதியாக; இறுக்கமாக; அந்தக் கையின் நடுக்கம் நிற்கும்படியாக. குலுக்கினான். மீண்டும் பிடித்தான். விடவே இல்லை.

"என்னைப் பத்தி ஒண்ணுமில்லே. நான் எந்தத் தப்பும் பண்ணலே. எனக்குப் பயமில்லே. ஆனா. அம்மா... கௌதம்... அம்மா..."

இப்போது உடைந்து விடுவான் என்று கௌதமுக்குத் தோன்றிற்று. இல்லை. மீண்டும் ஆதி வென்று விட்டான்.

"அம்மாவை அழைச்சுட்டு வர்றியா, கௌதம்?"

"மொதல்லே ஒன்னை ஜெயில்லே எடுக்க முடியுமான்னு பார்க்கிறேன்."

"அதுக்கு லேட்டாகும். நீ மொதல்லே அம்மாவைக் கூட்டியா. அவங்க ரொம்ப பயந்துட்டிருப்பாங்க. சைக்கிள் கொண்டாந்திருக்கியா?"

"கொண்டாந்திருக்கேன். சாப்பாடு எடுத்தாரட்டுமா?"

"வேணாம், பசி இல்லே!"
"இருக்கட்டும். நான் எடுத்தாரேன்."
இன்ஸ்பெக்டருக்கு வணக்கம் சொல்லிவிட்டு சாலை கடந்துச் சுமைதாங்கியருகே நிறுத்தியிருந்த சைக்கிளிடம் போனான்.

ஆதியின் வீட்டில் அவன் அம்மா மங்கலட்சுமி இல்லை. கதவுக்கு வெளியே பூட்டு தொங்கியது. எங்கே போனாள்?
எதிர் வீட்டில் தறி ஓடும் ஒலி கேட்டது. அங்கே சொல்லிவிட்டுப் போயிருப்பாள்.
கௌதம் தெருவில் நின்று, தறி மிதித்துக் கொண்டிருந்த இளைஞனை ஜன்னல் வழியே கூப்பிட்டான்.
"சம்பந்தம், ஆதியோட அம்மா எங்கே?"
"வீட்டிலே இல்லே?"
"கதவு பூட்டியிருக்குதே?"
"இரு, இரு... கோகிலம்... கோகிலம்" என்று தறியை விட்டு எழாமல் குரல் கொடுத்தான் சம்பந்தம்.
"என்னா?" என்று சிடுசிடுப்பாக உள்ளே குரல் வந்தது.
"அந்த ஊமச்சிம்மா எங்கே போனா? கௌதம் தம்பி வந்து கேக்குது..."
உள்ளிருந்து இருபது வயதுப் பெண் முந்தானையைப் போர்த்திக் கொண்டு கதவோரம் வந்து நின்றாள்.
"மொதலாளியூட்டுக்களத்திலே புளியாம். பழத்துக்குத் தொட்டு அடிக்கணுமாம். அதுக்கு ஆள் வந்து கூட்டிகிட்டு போச்சு."
"எப்போ?"
"நீங்க வந்து போன கையோட ஆள் வந்திடுச்சே!"
தான் வந்து போனது கவனிக்கப்பட்டிருக்கிறது.
"பூட்டு சாவி வேணாமா?"
"எதுக்கு?"
"அதும் புள்ளைக்குச் சோறாக்கி டிபின் பாக்ஸ்ல போட்டு வச்சிக்கிதாம். நீங்க வந்தா எடுத்துகிட்டு போவீங்கன்னு சைகை காட்டுச்சு."
"இருக்கட்டும். நான் போயி அந்தம்மாவைப் பார்க்கணும். அப்புறமா வந்து எடுத்துட்டுப் போறேன்."
கௌதம் சைக்கிள் ஏறினான்.
அந்தப் பெண் 'முதலாளி' என்று சொன்னது ஆதியின் நிலச் சொந்தக்காரரை. அவர் வீடு அன்னவாசலில்.
மங்கலட்சுமி புளியம்பழத்துக்குத் தொட்டு அடிக்க மட்டும் போகவில்லை என்று கௌதமுக்குப் பட்டது. அதுவும் இந்தச் சமயத்தில். ஆதி கைது செய்யப்பட்டதற்கு அவன் முதலாளியிடமிருந்து எந்த எதிரொலியும் இல்லை. கௌதம் அப்போது தான் நினைத்துப் பார்த்தான்.
அன்னவாசலில் துளசிங்கத்துக்கு அடுத்த படி அவர்தான் முக்கியப் புள்ளி. அவர் சொன்னால் ஊரில் எதுவும் நடக்கும்.

இன்ஸ்பெக்டர்: நீங்க சொன்ன லிஸ்ட் படி திருட்டுப்போன சொத்தின் மதிப்பு அஞ்சு லட்சம் வருது. வேறே ஏதாவது திருட்டுப் போயிருக்கா?

இரண்டு வருடங்களாக ஆதி அவர் நிலத்தைக் குத்தகை செய்து வருகிறான். அந்த தாட்சணியம் கூட அவரைப் பாதிக்கவில்லையா?

அன்னவாசலில் அவர் வீட்டருகே சைக்கிளை நிறுத்தும்போது, திண்ணைகளில் உட்கார்ந்திருந்த சிலர் அவனை ஏறிட்டுப் பார்ப்பதைக் கௌதம் கவனித்தான்.
களம் முடிந்து படியேறினால் வீட்டு வாசல் கூடம். நாற்காலி போட்டு அங்கிருந்தவாறே களத்து வேலையை முதலாளி பெருமான் சாமி மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தார்.
கௌதம் உள்ளே நுழைந்ததும் கல்லின் மீது புளியை வைத்து நசுக்கும் சுத்தியல் ஓசைகளும், தெறித் துள்ளி, தெறித்து விழுகின்ற புளியங்கொட்டை ஒலிகளும் சட்டென்று நின்று விட்ட நிசப்தம்.
யார் வந்தது, ஏன் புளி நசுக்கும் ஓசை நின்றது என்று அறியாமல், காது கேளாத மங்கலட்சுமி மட்டும் களத்தில் பரப்பியிருந்த புளியம்பழங்களின் மீது, தொட்டு நீங்க இரண்டு மூங்கில் கழிகளால் அடிக்கின்ற ஓசை தனித்துக் கேட்டது.
கண்ணாடியை ஒரு தரம் தூக்கி விட்டுப் பெருமான்சாமி தன்னைப் பார்ப்பதைத் தூரத்திலேயே கவனித்தான் கௌதம்.
அவன் மங்கலட்சுமியைக் கடந்து செல்வதைக் கூடக் கவனியாமல் அவளது கை மூங்கில்கள் கர்மசிரத்தையாகத் தொட்டடித்தன.
அவன் வீட்டுப் படியேறும் வரை நிலவிய நிசப்தம் "என்னம்மா, வேடிக்கை பார்த்துக்கிட்டிருக்கீங்க, நாளைக்கி சாயங்காலம் புளி லோடு ஏத்தணும், ஜல்தி ஆவட்டும்!" என்று அவர் விரட்டிய விரட்டலில் கலைந்தது.
மீண்டும் சுத்தியல்களின் சங்கீதம் தொடங்கியது. புதுப்புளி நசுங்கும் மணம் தொடர்ந்தது. வளையல்களும், சிதறும் புளியங்கொட்டைகளும், சிரிப்பொலிகளும் குலுங்கிய ஜீவகளை மீண்டது.
"வணக்கம் அண்ணா!"
"வா தம்பி, எங்கே ரொம்ப தொலைவு?"
நாற்காலிக்குப் பக்கத்தில் ஒரு ஸ்டூலின் மீது ஒரு செம்பும் அதன் மேல் கவிழ்த்து வைத்திருந்த ஒரு தம்ளரும் இருந்தன. அவற்றை எடுத்துக் கீழே வைத்துவிட்டு அவர் ஸ்டூலை இழுத்து எதிரில் போட்டார்.
"உக்காரு தம்பி!"
அவன் உட்கார்ந்தான்.



வீட்டுக்காரர்: என் செருப்பைக் கூடக் காணோம் ஸார்!

— தேவாதிதேவன்.

''சொல்லு. தாகத்துக்கு என்ன சாப்பிடறே? இளனியா, மோரா, ஷர்பத்தா?''

''ஒண்ணும் வேணாண்ணா!''

''வேகா வெயில்லே வந்திருக்கே!'' என்று சொல்லிவிட்டு, ''ஏய் மனோரு... உள்ளே போயி அம்மாட்டே தம்ளர் மோரு வாங்கியா?'' என்று உத்தரவிட்டார்.

இளவயசுக்காரி ஒருத்தி புளி நசுக்குவதை விட்டுவிட்டு எழுந்து உள்ளே போனாள்.

கௌதம் அவர் பம்பு ஷெட்டுகளைப் பலமுறை பழுது பார்த்திருக்கிறான். ஏதாவது மின்சாரக் கோளாறோ, இங்கிலீஷில் வந்த கடிதங்களைப் படிக்கவோ நேர்ந்தால் அவர் அவனுக்குத் தான் ஆள் அனுப்புவார்.

வந்த விஷயத்தை அவனாகச் சொல்லும் வரை ஏன், என்னவென்று கேட்காமல் பேசிக் கொண்டிருப்பார். எனவே அவனே நேரடியாக விஷயத்துக்கு வந்தான்.

''என்ன அண்ணா ஆதியை அரஸ்டு பண்ணிட்டாங்களே... கேள்விப்பட்டீங்களா?''

''கேள்விப்பட்டேன்! பைத்தியக்காரன். ஒரு வெறியிலே எசகுபிசகாமாட்டிக்கிட்டிருக்கான்.''

''அவன் செஞ்சிருப்பான்னா நம்பறீங்க?''

''அதான் போலீஸ் புடிச்சுக்கிட்டுப் போயிருக்கே, தம்பீ...''

''இல்லேண்ணா... இது ஆதி செய்ததில்லே. அவன் அப்படியெல்லாம் செய்யறவன் இல்லே. அவனைப் பத்தி ஒங்களுக்குத் தெரியாதா என்ன?''

''அவன் நல்லவன்தான்! நேத்து நொணா மரத்தண்டை ஏதோ கைகலப்பு நடந்துது. ஆதியை மாசிலான் அடிச்சுட்டான். இவன் கொலை வுழும்னு கத்தினான்னு ஊர் ஜனமே பாத்ததாச் சொல்லிக்கிறாங்க.''

மோர் வந்தது.

''சாப்பிடு தம்பீ!''

அவனுக்கு மோர் குடிக்கும் மனோநிலை இல்லை. மறுப்பது மரியாதைக் குறைவு என்று எடுத்துக் கொண்டான்.

அதற்குள் அவன் வந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்துக் கையிலிருந்த மூங்கில் கழிகளைப் போட்டுவிட்டு மங்கலட்சுமி வந்து படியோரம் நின்றாள்.

''நீங்க வந்து அவனுக்கு ஸ்டேஷன்ல ஜாமீன் குடுத்தா விட்டாலும் விடுவாங்க அண்ணா!''

கொஞ்சம் கூட வளர்க்க இடமின்றி பெருமான்சாமி குறுக்கிட்டார்.

''இந்த இன்ஸ்பெக்டரு ரொம்ப கண்டிஷன் காரம்பா! பட்டுனு ஒண்ணு சொல்லிட்டான்னா அப்புறம் என்ன பண்றது? ஒன் அக்கறை எனக்கு இல்லாமயா போயிடும்? கேஸ் நடக்கட்டும். அப்புறம் பார்த்துக்கலாம்'' என்று ஒரு பார்வை அவன் மீதும் மறுபார்வை மங்கலட்சுமியின் மீதுமாக ஓட்டியபடியே லகுவாகத் தட்டிக் கழித்துவிட்டார்.

''செலவுக்கு ஏதாவது பணம் தேவைன்னா கணக்கப்பிள்ளைகிட்டே கேட்டு வாங்கிக்கன்னு மங்கலட்சுமிகிட்டே சொன்னேன்! வாயில்லாத ஜீவன். 'ஒ'ன்னு அழுவுது'' என்று பச்சாதாபப்பட்டார் பெருமான்சாமி.

கௌதமின் அடிவயிற்றிலிருந்து ஒரு குமுறல் பிறந்தது.

''படுபாவிப் பையன்! கார் அறுக்கற டயம். இந்த நேரத்திலே இப்படிப் பண்ணிட்டானே இவன் போயி ஜெயில்லே ஒக்காந்துட்டா அந்தப் பயிரு என்னா ஆவறது? இவன் எங்கேருந்து குத்தகை போடறது? நான் எப்படி இவனைக் கேக்கறது? இப்ப பயிரைக் காப்பாத்த நான் வேற ஆள் தேடணும்!''

இனி அங்கு தாமதிப்பதில் ஒரு பயனுமில்லை. கௌதமுக்குப் புரிந்தது.

''அப்ப நான் பொறப்படறேன் அண்ணா! அவனுக்கு லாக்கப்பிலே சாப்பாடு குடுத்தாங்களா இல்லியான்னு கவனிக்கணும்.''

அவன் எழுந்தான்.

''பணம் வேணும்னா நீ சொல்லு தம்பீ!''

''பரவாயில்லே அண்ணா, தேவைன்னா கேக்கறேன்.''

படியிறங்கும் போது கண்ணீர் வழிய நின்ற அந்த ஊமையின் முகம் கௌதமைக் கலக்கிற்று.

'என்ன ஆயிற்று?' என்று சைகையால் அவள் கேட்டாள்.

அவனுக்கு ஏனோ தன் அம்மா நினைவு வந்தது. உணர்ச்சிப் பெருக்கை வாய்க்குள் பல் கடித்துச் சமனப்படுத்தினான்.

''நான் போய்ச் சாப்பாட்டுக் காரியரை எடுத்துச் சென்று ஆதிக்குக் கொடுத்துவிட்டு வருகிறேன்'' என்பது போல் சைகை காட்டி, ''நீ என்னோடு சைக்கிளில் வருகிறாயா?'' என்று கேட்டான்.

அவள் போய் பெருமான்சாமியிடம் உத்தரவு வாங்கி வந்தாள்.

''சீக்கிரம் கொண்டாந்து விட்டுடுப்பா!'' என்று அங்கிருந்து பெருமான்சாமி குரல் கொடுத்தார்.

அவர் கவலை அவருக்கு. நாளை மாலை புளியோடு போக வேண்டும்.

கௌதம் மனத்தில் ஒரு கசந்த சிரிப்பு எழுந்தது.

(தொடரும்)

# ரேடியோவால் நின்றது

கல்யாண மண்டபத்திலிருந்து வெளியே வந்தேன். சின்ன மண்டபம் தான் என்றாலும், லட்சணமாக, சுத்தமாக இருந்தது. மண்டபத்தின் அழகுக்கு நான் கூட, இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளலாமோ என்று தோன்றியது.

தூரத்தில் சின்னச் சின்னக் குன்றுகள். எதிர்த்தாற்போல பவானி ஆறு. இரண்டு பரிசல்கள், அக்கரைக்கும் இக்கரைக்கும் மாறி மாறிப் போய் வந்தன.

கொஞ்ச நேரத்துக்கு முன்னால் தான் கல்யாணப் பெண் வந்தாள். மாப்பிள்ளை மத்தியானம் வந்துவிட்டான். கல்யாணக் கூட்டம் நூறு பேருக்குள் அடங்கி விடும். இப்போது மணி அஞ்சு நாப்பது. இன்னும் ஒரு மணி நேரத்தில் அநேகமாக எல்லோரும் வந்துவிடுவார்கள்.

மாப்பிள்ளை சின்ன ஒர்க்ஷாப் வைத்திருக்கிறான். மூன்று 'லேத்' மிஷனுக்கும் இடைவிடாத வேலை இருக்கிறது. குடும்பத்தில் கடைசிப் பையன். மற்ற இரண்டு அண்ணன்களுக்கும், இரண்டு தங்கைகளுக்கும் கல்யாணமாகிவிட்டது. சுயமாக முன்னுக்கு வந்தவன் என்பதால், எல்லா விஷயத்திலும் கரெக்டாக இருப்பவன். ஓரளவுக்கு முன்னுக்கு வந்த பின் தான் கல்யாணம் என்று சொல்லிக் கொண்டிருந்தவன், அதே போல் சற்று வசதி வந்ததும் தான் கல்யாணத்துக்கு ஒப்புக் கொண்டான்.

பெண்ணுக்குப் பத்தாவது வரைதான் படிப்பு. நல்ல சிவப்பு. அழகி என்றே சொல்லலாம். ஆனால் சொத்து கிடையாது. அவள் அப்பா, இவளையும், இன்னும் மூன்று பையன்களையும் வைத்துச் சோறு போடுவதே பெரிய சிரமம்.

"எனக்கு வர்றவ நூறு பவுன் நகையோட வரணும்னு நெனைக்கலே. சுமாரான படிப்பு, லட்சணம், நடைமுறை அறிவு — இந்த மூணு இருந்தாலே போதும்; மிச்சத்தை நான் பாத்துக்கறேன். ரெண்டு நாள் நான் காய்ச்சலா படுத்துட்டா, அவ, ஒர்க்ஷாப்பைப் பார்த்துக்கற அளவுக்கு ட்ரெயினிங் கொடுத்துடுவேன்" என்று மாப்பிள்ளை சொல்லிக் கொண்டிருந்தான்.

அவன் எதிர்பார்த்ததுக்கு மேலே பெண் கிடைத்துவிட்டாள்.

பெண்ணின் அப்பா, கல்யாணத்தைச் சிக்கனமாக நடத்தவேண்டும் என்றார்.

பிரதிபா ராஜகோபாலன்

"ஓ. கே. எனக்கு ஆட்சேபணை இல்லை. வெட்டியா ஆயிரம் பேரைக் கூப்பிட்டு, விருந்து வெச்சு, கடன் பண்ணிக்கிறதுல என்ன அர்த்தம் இருக்கு?" என்று மாப்பிள்ளையும் தன் கருத்தைச் சொல்ல, கல்யாணக் காரியம் மளமளவென்று வளர்ந்தது.

இந்த அமைதியான அழகான இடத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டாலே, வாழ்க்கை சுமுகமாக நடைபெறும் என்று நினைத்துக் கொண்டேன்.

தமிழாசிரியர் உத்தியோகத்திலிருந்து இரண்டு நாட்கள் விடுப்பு எடுத்துக் கொண்டு வந்திருந்த நான், பெண்ணுக்கு அண்ணன் முறை ஆக வேண்டும். அந்தச் சாயங்கால அமைதியில் மனம் தோய்ந்து, ஆற்றோரம் சற்று நடந்து, காற்றின் குளிர்ச்சியையும், தோப்பின் பசுமையையும், குன்றுகளின் இளநீலத்தையும், பறவைகளின் ஆரவாரத்தையும் ரசித்துக் கொண்டு, மண்டபம் திரும்பிய போது, கல்யாணக் கூட்டம் அநேகமாகத் திரண்டுவிட்டிருந்தது. சமையல் மணம் இதமாகச் சூழ்ந்திருந்தது. மண்டபத்தின் மூலையில் சீட்டாட்ட கோஷ்டி உல்லாசமாக இருந்தது. கண்டும் காணாமல் சிலர் தண்ணி போட்டுக் கொண்டு, எல்லோரையும் மாமா, மச்சான் என்று அழைத்துக் கொண்டிருந்தார்கள். பெண்கள் கூட்டம் புடைவை, நகை, வயசுக்கு வந்த பெண்கள் பற்றி என்று புளகாங்கிதமாக இருந்தது.

மாப்பிள்ளையைச் சுற்றி நண்பர்கள் கூட்டம் கிண்டலடித்துக் கொண்டிருந்தது.

'கல்யாணம்னா இப்படித்தான் சந்தோஷமா இருக்கணும்?' என்று நினைத்துக் கொண்டு, நான் கொண்டு வந்திருந்த டிரான்சிஸ்டர் ரேடியோவை எடுத்துச் செய்திகள் கேட்க ஆரம்பித்தேன்.

"ஏன் மாப்பிள்ளை, உனக்கு நல்லாவா இருக்கு? இருந்தாலும் மகாமட்டமான ஆளுப்பா நீ. நாய்த் தோல்ல வடிகட்டின கஞ்சனா இருக்கியே?" என்று ஒரு நண்பன் வம்புக்கு இழுத்தான்.

"என்னப்பா, உங்களுக்குக் குறை வச்சேன்? ஆசைப்பட்டீங்கன்னு புல் பாட்டிலே நாலு வாங்கிக் குடுத்திருக்கேன். இனி என்ன?" என்று மாப்பிள்ளை புலம்பினான்.

"பாட்டில் இருக்கட்டும். இந்த ஆத்தோரம் ஒதுக்குப்புறமா, ஆந்தை கத்தற மண்டபத்துல எங்களைக் கொண்டு வந்து உக்கார வச்சுட்டியே? பொழுது போறதுக்கு

# போன விவாகம்

ஒரு விடியோ டெக் கொண்டு வந்து வெச்சா, ரெண்டு படமாவது பாக்கலாம் இல்ல? பொம்பளைங்க எல்லாம் டெக் டெக்குனு பறக்கிறாங்களே.... உன் புண்ணியத்துல எல்லாரும் பாத்துக்கறோமே?'' என்று நண்பன் வலியுறுத்தவே, மற்றவர்களும் கோழியை அமுக்குவது போல அமுக்தி, அவனைச் சம்மதிக்க வைத்தார்கள்.

அதோடு காரியம் முடிந்திருந்தால், அந்த விபரீதம் நடந்திருக்காது.

மாப்பிள்ளையின் மைத்துனன், ''டெக் என்ன மச்சான் டெக், கல்யாணத்தையே முச்சூடா, விடியோ பிலிம் எடுத்துறலாம். ஆகிற செலவைப் பாதிப் பாதியாப் பொண்ணு வீடும் மாப்பிள்ளை வீடும் ஏத்துக்கலாம்'' என்று அழுத்தமாகச் சொல்லவே, ஒரு மணி நேர விவாதத்துக்குப் பின் இரண்டு வீட்டிலும் சம்மதித்தார்கள்.

மாப்பிள்ளை கஞ்சன். வேறு வழி இல்





"தெரிந்தவர்களிடம் எப்போதுமே கடன் கேட்கக் கூடாது!"

"ஏன்...?"

"ஏற்கெனவே வாங்கியிருந்தாலும் வாங்கியிருப்போம்!"

— கடுவை கோபால்சாமி.



லாமல் ஏற்றுக் கொண்டான்.

பெண்ணின் தந்தை, போதிய வசதி இல்லாதவர். இருந்தும் பெண்ணின் கல்யாணம் இவ்விதம் நவீனமாகப் பதிவாகட்டும் என்று நினைத்துச் சம்மதித்தார்.

இரண்டு மணி நேரத்தில் நகரத்திலிருந்து வீடியோ காமிராவுடன் ஆட்கள் வந்து விட்டார்கள். எல்லோரும் உற்சாகமாக காமிராவில் விழுந்தார்கள். இரவு முழுவதும் மூன்று சினிமாக்கள் வேறு காட்டினார்கள். குறிப்பாகத் தாய்க்குலங்கள் புளகாங்கிதமாய்ப் பொழுதைக் கழித்தார்கள்.

அதிகாலையில் முகூர்த்த நேரத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் சற்று வேகமாக நடந்தன.

மாப்பிள்ளையின் மைத்துனன், வீடியோ காமிராக்காரரை, அழைத்து, "அண்ணே, இது வரைக்கும் படம் எடுத்ததை டெக்குல போட்டுக் காட்டுங்க" என்றார்.

அவரும், போட்டுக் காட்டினார்.

எல்லாரும், தங்கள் உருவத்தைப் பார்த்ததும் உருகிப் போனார்கள்.

"நம்மூருக்குப் பாக்கியராசு வந்தா, ஒரு சான்ஸ் கேட்கலாம் போலத் தான் தோணுது. இப்ப யார் யாரோ சினிமாவுக்கு வந்திருக்காங்க. அவங்களுக்கு நாம ஒண்ணும் கொறஞ்சு போகலே" என்று பலரும் பேசிக் கொண்டார்கள்.

அப்போது தான், மாப்பிள்ளையின் தங்கை, பொன்னாத்தா என்கிற பொன்மணி அந்த அணுகுண்டைப் பற்ற வைத்தாள்.

"ஏனுங்க" என்று தன் கணவனைக் கூப்பிட்டாள்.

"என்ன?" என்று கேட்டான் கணவன்.

"இந்த வீடியோ சினிமா எடுத்தாங்களே, அதப் போய்ப் பாருங்க.... அண்ணனைக் கொஞ்ச நேரம் தான் எடுத்திருக்காங்க. கல்யாணப் பொண்ணைத்தான் அதிக நேரம் எடுத்திருக்காங்க. குனிஞ்சா, நிமிர்ந்தா, சிரிச்சா, பூ வெச்சா, பொட்டு வச்சா, நின்னா, நடந்தா, சாப்பிட்டா, கை கழுவுனான்னு பூராவும் அவளைத்தான் எடுத்திருக்காங்க. எங்க அண்ணனைப் போனாப் போகுதுன்னு அங்கே இங்கேன்னு கொஞ்ச நேரந்தான் எடுத்திருக்காங்க. ஒரு மணி நேர சினிமான்னா, முப்பது நிமிஷம் அண்ணனுக்கும், முப்பது நிமிஷம் அவளுக்கும்னு தானே எடுக்கோணும்? சார்ஜ்ஜு மட்டும் பாதிப் பாதின்னு நீங்க ஏத்துக்காதீங்க. கல்யாணப் பொண்ணோட அப்பனைக் கூப்பிட்டுக் கேளுங்க. காசில்லைன்னு பிச்சைக்கார வேஷம் போடறாரு அந்த ஆள். இப்பவே கறாரா இல்லைன்னா, ரொம்ப எளக்காரமாப் போயிடும். பொண்ணு, தான் சிவப்பா இருக்கான்னு ரொம்பப் பெருமைப்பட்டுகிறா. வீடியோவுல பாத்தவங்கல்லாம் ஜெயப்ரதா மாதிரி இருக்கான்னு சொல்லச் சொல்ல விஷயம் எப்படியோ போகுது.." என்று பொன்னாத்தா ஸ்க்ரூ கொடுத்ததும், அவள் கணவன் அவள் உணர்ச்சியை அப்படியே மனசில் வாங்கிக் கொண்டு நேராய், பெண்ணின் தகப்பனாரைத் தேடிக் கொண்டு போனான்.

"யோவ், என்னய்யா வெளையாடறீங்க? உம் பொண்ணு செவப்புன்னு, பூரா வீடியோவும் நீங்களே எடுத்துக்கறதா? சார்ஜ்ஜு பாதிப் பாதின்னு பேசிட்டு, எங்களை இளிச்சவனாய் ஆக்கிட்டியா?" என்று உச்சஸ்தாயியில் கத்த ஆரம்பித்ததும் பெண்ணின் தகப்பனார், விவரம் புரியாமல் விழித்தார்.

பொன்னாத்தாவின் கணவன் விவரித்ததும், ஆள் பரிதாபமாகச் சொன்னார்.

"என்ன கண்ணு, சும்மா இருந்த என்னை வீடியோ எடுக்கோணும்னு கட்டாயம் பண்ணினீங்க... பாதிப் பாதி சார்ஜ்னு சொன்னீங்க.... கடனோட கடனா இருக்கட்டும்னு ஒத்துட்டேன்.... இப்பப் போயி என்னென்னமோ பேசறீங்களே? இப்பத்தான் என்ன கெட்டுப் போச்சு? மாப்பிள்ளையை நெறைய நேரம் சினிமா எடுங்களேன், நானா வேண்டாங்கிறேன்? தாலி கட்டினா ரெண்டு பேரும் ஒண்ணாயிடறாங்க... அப்புறம் பையன் ஆடாவது? பொண்ணு ஆடாவது...."

"யோவ், எனக்குத் தெரியும். நீ இப்படிப் பேசவேண்ணு.... தாலி கட்டினா பொண்ணும் பையனும் ஒண்ணாயிடுவாங்கன்னா, கல்யாணச் செலவு பூராவையும் நீயே ஏத்துக்கய்யா.... பெரிய மனுஷன் பேசற பேச்சைப் பாரு.... இந்த வீடியோ சார்ஜ்ஜு முழுசையும் நீயே குடுத்துரு. எங்களுக்கு வீடியோவும் வேண்டாம், ஆடியோவும் வேண்டாம்" என்று அதிரடித் தாக்குதல் கொடுக்கவே, சுற்றி நின்ற கல்யாணக் கூட்டம் இரண்டு பிரிவாய்ப் பிரிந்து வாய்க்கு வந்த

தைப் பேச, முகூர்த்த நேரம் நெருங்கி விட்டது.

அப்போது தான் நான் குறுக்கிட்டேன்.

''என்னப்பா, இந்தச் சின்ன விஷயத்துக்காக, வந்த வேலையை மறந்துடுவீங்க போலிருக்கு?'' என்று இரண்டு வீட்டுத் தரப்பிலும் சமாதானப்படுத்த முயன்றேன்.

''அட நீங்க ஒண்ணு.... சும்மா இருங்க... இப்பக் கறாராப் பேசலின்னா, ரொம்ப எளக்காரமாப் போயிடும். வாழ்க்கை பூராவும் எங்கண்ணனுக்கு ஒரு மதிப்பு இல்லாமல் போயிடும். தோலு கொஞ்சம் செவப்புன்னு, இத்தனை மினுக்கல் ஆகாது. வீடியோக்காரனைக் கைக்குள்ள போட்டுட்டு, எத்தனை நேரம், எப்படி எப்படியோ 'போசு' குடுக்கறா... எவ கண்டா, அவளுக்கும் வீடியோக்காரனுக்கும் என்ன சிநேகிதமோ''...... என்று பொன்னாத்தா ஆங்காரமாய் வெடிக்க, அவள் புருஷன், ''என் மனசுக்குள்ள இருந்தது. நீ வெளிப்படையாச் சொல்லிட்டே'' என்று கத்தவும்......

பெண் வீட்டுக்காரர்களுக்கு வெறியே வந்துவிட்டது.

''என்னடி சொன்னே.... எங்க பொண்ணுக்கும் வீடியோக்காரனுக்கும் சிநேகிதமா? அவ தோலு செவப்புன்னா, உனக்கென்னடி பொத்துட்டு வருது.... உன்னை மாதிரி அம்மாசை நெறத்துல இருக்கோணுமா? அவளுக்கும் அவனுக்கும் சிநேகிதம், அது இதுன்னு ஒரு வார்த்தை பேசுனீங்க, மாறு கால் மாறு கை வாங்கிடுவேன்'' ஒருவர் கண் சிவக்க, மீசை துடிக்க மிரட்டினார்.

''இந்த மிரட்டலுக்கு, நாங்க யாரும் பயப்படமாட்டோம். செவேல்னு இருக்கறான்னு மாப்பிள்ளை மயங்கிட்டான். கொஞ்ச நிமிஷத்துல ஒருத்தனுக்குப் பொண்டாட்டியா ஆகப் போறவ, இத்தனை பேரு முன்னாடி, வீடியோ சினிமாவுக்கே இத்தனை தளுக்குத் தளுக்குனா, எதிர்காலத்துல எப்படி எல்லாம் இருப்பாளோ? இவளை எல்லாம் கட்டிட்டுப் போய்ட்டா, ரெண்டு மாசத்துல ஊட்டுல வெளக்கு வச்சுடுவா.... போதும் உங்க சம்பந்தம்.... டேய் மாப்பிள்ளை எந்திரிடா போகலாம். உலகத்துல உனக்குப் பொண்ணா இல்லே? கையைத் தட்டினா, இவளை விட அழகா இவ்வளவு வரிசைல நிப்பாங்க.... ம்.... எந்திரி.....'' என்று மாப்பிள்ளைக்குச் சித்தப்பா... ஆணையிட, ஆளுக்கு ஆள் பேச, கை கலக்க, பத்து நிமிடத்தில் கல்யாண மண்டபம் 'கில்'யாண மண்டபம் ஆகிவிட்டது.

யார் என்ன தடுத்தும் கேளாமல் மாப்பிள்ளையும் அவனைச் சார்ந்தவர்களும் ஆற்றில் இறங்கி, பரிசல் ஏறி அக்கரை போய்விட்டார்கள்.

முகூர்த்த நேரம் பாதி தாண்டிவிட்டது.

பெண்ணின் தகப்பனார் நெஞ்சு வலிக்கிறது என்று சுவரோடு சாய்ந்து உட்கார்ந்து விட்டார். பெண் வீட்டார்களும் கண் கலங்கி விட்டார்கள்.

''சின்ன விஷயத்துக்குக் கல்யாணத்தையே நிறுத்திட்டுப் போய்ட்டானே... கொள்ளைல போனவன்....'' என்று பல பெண்கள் சாபம் இட்டார்கள்.

இத்தனைக்கும் நடுவில் கல்யாணப் பெண் ஜன்னல் வழியே பவானியையும் பரிசல்களையும் வெறித்தபடி நின்றாள். அதைப் பார்த்ததும் அவள் விபரீதமாய் ஏதேனும் செய்து விடுவாளோ என்கிற அச்சம் ஏற்பட அவளை நெருங்கி, ''ஏம்மா கவலைப்படாதே.... போயிட்டுப் போறான். உலகத்திலே வேற மாப்பிள்ளையா இல்லே? உனக்குப் புடிச்சவரா ஒருத்தரைச் சொல்லு, கல்யாணம் பண்ணி வைக்கிறேன்'' என்று இதமாகச் சொன்னேன்.

அவள் சடாரென்று நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். உலகத்து விரக்தியெல்லாம் ஒரு சேர அவள் கண்ணில்..... ''இப்ப ஓடிப் போன மாப்பிள்ளையை நான் விரும்பியா பண்ணிக்கலாம்னு இருந்தேன்? அவனைப் பண்ணிக்கணும்னு எங்கப்பா சொன்னாங்க. சரின்னு சொன்னேன். அதனால், இப்பவும், என்னைப் பண்ணிக்க வேற யாரை நீங்க ஏற்பாடு செய்தாலும் நான் கழுத்த நீட்ட வேண்டியதுதானே அண்ணாச்சி.....?'' என்றாள்.

அவள் கேள்வியையும் கண்களையும் சந்திக்கத் திராணியின்றித் தலை கவிழ்ந்து நின்றேன்.

---

அடிலைட் நகரில் 54 வயதான கென்னத் என்பவர் ஒரு புத்தகக் கடையில் நுழைந்து புத்தகங்களைப் பார்வையிடுவது போல நடித்து, 78 டாலர் மதிப்புள்ள புத்தகம் ஒன்றைத் திருடி விட்டார். இதைக் கடைக்காரர் பார்த்து விடவே, கென்னத் போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டார். விசாரணைக்குப் பின் போலீஸ் அவரது வீட்டைச் சோதனையிட்ட போது அதிர்ச்சியடைந்தது.

ஒன்றல்ல, இரண்டல்ல! வீடு முழுக்கத் திருடிச் சேர்த்த புத்தகங்களே நிரம்பியிருந்தன! இவற்றின் எடை 12 டன்! இவற்றை எப்படி உரியவர்களிடம் சேர்ப்பிப்பது என்று காவல்துறையினர் குழம்பிப் போயிருக்கிறார்கள்!

— சக்தி ஏ. ஜே. ஜப்பார்.



* தொடரில் ஒரு காட்சி.

திப்பு சுல்தான்
டீ.வி. தொடர்:

# 'தீயினால் சுட்டபுண் ஆறுமுன்

* திப்புவாக சஞ்சய் கான்.

சஞ்சய் கானின் 'திப்பு சுல்தான்' டி. வி. தொடர் ஃபிப்ரவரி 10—ஆம் தேதி முதல் ஒளிபரப்பப்பட்டிருக்க வேண்டும். ஆனால், 'இன வெறியனான திப்பு சுல்தானை உயர்வான பாத்திரமாகச் சித்திரித்திருக்கிறது இத்தொடர்' என்று கூக்குரல் எழ, மத்திய தகவல் தொடர்புத் துறை அமைச்சர் உபேந்திரா தொடரைத் தாற்காலிகமாக நிறுத்தி வைக்க உத்தரவிட்டுள்ளார். ஒரு நிபுணர் குழுவின் பார்வைக்கு இந்த 52 வாரத் தொடர் சமர்ப்பிக்கப்படவுள்ளது.

# நாவினால் சுடுகிறார்கள்...'

— சஞ்சய் கான் சிறப்புப் பேட்டி

கேள்வி: நீங்கள் 'திப்பு'வைத் தேர்ந்தெடுத்ததற்குப் பிரத்யேகமான காரணங்கள் என்ன?

பதில்: முதல் காரணம்: எல்லோரும் நினைப்பது போல் நான் பஞ்சாபியோ, காஷ்மீரியோ அல்ல! பெங்களூர்க்காரன்! ஆக திப்பு 'எங்க ஊர்க்காரன்'. அடுத்து, பகவான் கித்வானியின் 'The Sword of Tippu' என்ற புத்தகம் என்னை மிகவும் கவர்ந்தது! திப்புவை வீர தீர மிக்க மன்னனாக மட்டுமின்றி, ஈரமிக்க மனிதனாகவும், அறிவாற்றலும், மதச்சார்பற்ற விசால மனமும் கொண்ட நல்லவனாகவும் அது சித்திரிக்கின்றது! இந்தியப் புலனாய்வுத் துறையின் தலைவரான டாக்டர் ராகவிடமிருந்து சில விநோதமான செய்திகளைத் தெரிந்து கொண்டேன். நஞ்சங்கூடு ஆலயத்திலுள்ள சிவலிங்கம், திப்பு ஸ்தாபித்தது! தசராவின் போது ஊர்வலமாக மைசூர் வீதிகளில் எடுத்துச் செல்லப்படும் தேவியின் நவரத்னக் கிரீடம் திப்புவால் அளிக்கப்பட்டது! தினமும் காலை ஒன்பது மணிக்கு ஸ்ரீரங்கநாதர் ஆலயத்தில் தியானம் செய்துவிட்டு, ஸ்ரீரங்கநாதரைத் தரிசனம் செய்த பின்னரே காலை உணவை உண்பான் திப்பு! ஒருமுறை பட்டத்து யானை கண்ணில் அடிபட்டு, எந்தவிதச் சிகிச்சையும் பலனளிக்காமல் கஷ்டப்பட்டது! அப்போது நஞ்சங்கூடு ஆலயத்திலிருந்து விபூதியை வாங்கி, அதன் கண்களைச் சுற்றித் தடவச் செய்து அதைக் குணப்படுத்தினான் திப்பு! இதுபோன்ற அரிய செய்திகள் திப்புவின் பரந்த மனத்தை எண்ணி என்னை மெய்சிலிர்க்க வைத்தன! பொதுமக்கள் பலரைச் சந்தித்து, கித்வானியின் புத்தகத்தின் மீதும் திப்புவின் மீதும் அவர்கள் வைத்திருந்த பெருமதிப்பை அறிந்து கொண்டேன். அவனைப் பற்றிப் படமெடுக்க வேண்டுமென்ற உத்துதல் அதிகமாயிற்று. 1978—இல் புத்தகத்தின் உரிமைகளை வாங்கியபோது, திரைப்படமாகத் தயாரிக்க வேண்டுமென்ற எண்ணத்திலிருந்தேன். ஆனால் ஏற்கெனவே ஜெயராஜ் நடித்து, திப்புவைப் பற்றிய வெற்றிப் படம் 1959—இல் வெளிவந்துவிட்டது. டி. வி.யில் தொடராகவந்தால் இன்னுமதிகமான மக்கள் பார்ப்பார்களே என்றுதான் 1987—இல், டி. வி. தொடராக அதை எடுக்க முடிவெடுத்தேன்.

கே: டி.வி.யில் அனுமதி பெறுவதில் ஏதேனும் சிரமங்களிருந்ததா?

ப: இல்லவே இல்லை! கித்வானியின் புத்தகம், எங்களது ஸ்க்ரிப்ட், 'பைலட்' எனப்படும் தொடரின் மாதிரிப் பகுதி — எல்லாவற்றையும் தூர்தர்ஷன்காரர்களிடம் சமர்ப்பித்து, அங்கேயுள்ள சட்டதிட்டங்களறிந்த உயர் அதிகாரிகளின் முறையான ஒப்புதலைப் பெற்ற பின்னரே ஷூட்டிங்கைத் துவக்கினோம்.

கே: இத் தொடருக்கு எதிராகத் திடீர்ப் புயல் எப்படி உருவாயிற்று?

ப: திடீரென்று ஏதாவது அமைச்சருக்கு என் மீது கோபம் வந்து விட்டதோ என்னவோ! தொடரைப் பார்க்காமலேயே அதைத் தடை செய்ய உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இத்தனை நாளாக இல்லாமல் எதற்கு இப்போது அவன் சரித்திரத்தைக் கிளறுகிறார்கள் என்று புரியவில்லை. திப்பு சுல்தான் கேரளாவில் ஹிந்துக்களைக் கொன்று குவித்தான்; வற்புறுத்தி மதமாற்றம் செய்தான் என்றெல்லாம் நான் காட்ட வேண்டுமாம்! இந்தச் சம்பவங்கள் உண்மையா இல்லையா என்று முடிவெடுக்க நான் சரித்திர ஆய்வாளன் அல்ல; நான் கதையமைக்க எடுத்துக் கொண்ட புத்தகமும் பல சரித்திர உண்மைகளை ஆதாரங்களா

**அரசியல் ரதங்கள்!**

> யார் யார், எந்தெந்த ரதத்தைப் பயன்படுத்தினர்?
>
> 1. விஜயந்தா ரதம், 2. விஜய ரதம், 3. சைதன்ய ரதம், 4. இந்திரா விஜய ரதம், 5. விஜய சக்ரா, 6. ஜெய ரதம்.
>
> விடைகள்: ...52 ஆம் பக்கம்.

விடைகள்: ...52 ஆம் பக்கம்.

க் கொண்டதுதான்!

அதன்படி, திப்பு கொன்றது இந்துக்களையோ அல்லது குறிப்பிட்ட வேறு மதத்தினரையோ அல்ல. அவன் தன்னை எதிர்த்தவர்களை இன மத பேதமின்றித் தீர்த்துக் கட்டியுள்ளான்! அவ்வளவுதான். பிரிட்டிஷாருக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினான் என்பதால் கிறிஸ்துவர்களை ஹிம்சித்தான் என்று கொள்வதா?

கே: திப்புவின் கருமையான பகுதிகளை நீங்கள் இருட்டடிப்புச் செய்து விட்டீர்கள் என்பது உங்கள் தொடரை எதிர்ப்போருடைய வாதம்; சில காட்சிகளை மாற்றியமைத்தால் திப்புவை முழுமையாகச் சித்திரித்தது போலாகும் என்று எதிர்பார்க்கிறார்களோ என்னவோ?

ப: எனக்குத் திப்புவைப் பற்றிய "மறு பக்கம் — கருமையான பக்கம்" தெரியாது! ராஜ்ய சபை உறுப்பினரான பிஷம்பர் பாண்டே, 'தரம் யுக்' பத்திரிகையில் திப்புவை மதச் சார்பற்றவன் என்று தெள்ளத் தெளிவாகக் கூறியுள்ளார். திப்பு சுல்தான் என்று விமானத்துக்கும் திப்பு — எக்ஸ்பிரஸ் என்று ரயிலுக்கும் அரசாங்கமே பெயர் சூட்டியுள்ளது. பத்தாவது வகுப்பினருக்கான இந்திய சரித்திர பாடபுத்தகங்கள் திப்புவை மாபெரும் சுதந்திரப் போராட்ட வீரனென்று புகழ்கின்றன. திப்புவின் பதின்மூன்று மந்திரிகளில் எழுவரும், பத்தொன்பது படைத் தளபதிகளில் ஒன்பது பேரும் இந்துக்கள்! மதவெறியனாக இருந்தால் இவர்களை எல்லாம் முதலில் மதமாற்றம் செய்திருக்க மாட்டானா? இந்துக்களை வெறுப்பவனாயிருப்பின் இந்துக் கோயில்களுக்கு மானியங்கள் வழங்கியிருப்பானா? சிருங்கேரி சங்கராச்சாரியாருடன் தொடர்பு வைத்திருப்பானா?

ஒரு மனிதனை நல்லவனாகச் சித்திரிப்பதில் யாருக்கு என்ன கெடுதல் செய்யப் போகிறோம்? தீமையையும் வன்முறையையும் காட்டிக் காட்டி மக்களைக் குட்டிச் சுவராக்கியது போதாதா? யாருக்காவது திப்புவின் 'கறுப்பு'ப் பக்கங்களை மக்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று தோன்றினால் அவர்கள் அப்படிப்பட்ட தொடர் ஒன்றைத் தனியே தயாரிக்க வேண்டியதுதானே! கறுப்பு, பச்சை, நீலம், சிவப்பு என்று எத்தனை கோணங்களில் அவனைப் பார்க்கிறார்களோ அத்தனை கோணங்களிலும் சித்திரித்து விட்டுப் போகட்டுமே! அதை விட்டு விட்டு என்னை ஏன் கஷ்டப் படுத்துகிறார்கள்? தீயினால் சுட்ட புண் இன்னும் ஆறவில்லை; இவர்கள் வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சுகிறார்களே!

கே: நீங்களும் சரித்திரத்தை ஆதாரமாகக் காட்டுகிறீர்கள்; உங்களை எதிர்ப்பவர்களும் அதையே செய்கிறார்கள்! இதற்கொரு சுமுகமான முடிவு காண்பதெப்படி?

ப: நான் சரித்திரம் படைக்கவில்லை! எனக்குப் பிடித்த ஒரு புத்தகத்தை, சரித்திர நாவலை, நான் நாடகமாக்குகிறேன்! இதைத் தெள்ளத் தெளிவாக எல்லோரும் புரிந்து கொண்டால் பிரச்னையே எழாது! இந்திய அரசியலமைப்பின், 19 வது, 51 வது சட்ட விதிகளின்படி எந்தக் குடிமகனும் தான் விரும்புகின்ற ஒரு கதையை நாடகமாக்கலாம்! அதன்படித்தான் நான் செய்துள்ளேன்!

கே: மத்தியில் அரசு மாறியதற்கும் இதற்கும் ஏதேனும்.....?

ப: அரசை ஏன் குற்றம் சொல்ல வேண்டும்? ம.வி.யில் என் பகுதியை ஆக்கிரமிப்புச் செய்து கொள்ள விரும்புபவர்களின் விஷமத்தனம்தானிது! கூட இருந்தே குழி பறிக்கும் புல்லர்கள்!

கே: டிமர்த் தடையினால் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பாதிப்புகள்....?

ப: பயங்கர சோதனை மேல் சோதனை! உடலாலும் உள்ளத்தாலும் மிகவும் நொந்து போயிருக்கிறேன். பண விஷயத்திலும் பேரிடி! என்னுடைய ஸ்பான்சர்கள் நால்வருள் ஒருவர் விலகி விட்டார்; மற்ற மூவரும் மெதுவாகக் கழன்று கொள்ளப் பார்க்கிறார்கள். இரண்டரை கோடி ரூபாய் இதில் முடங்கிக் கிடக்கிறது! வட்டிக் கொடுத்தே கட்டுப்படியாகவில்லை; என் யூனிட்டிலிருக்கும் 160 பேர்களுக்கு நான் பதில் சொல்ல வேண்டும்; தீ விபத்துக்கான நஷ்டஈடு வேறு கொடுத்தாக வேண்டும்! போதாக்குறைக்கு என்னைப் 'பொய்யன்' 'புளுகன்' என்றெல்லாம் பெயரிட்டு அவமானப்படுத்துகிறார்கள்!

கே: எதிர்ப்பை எப்படி முறியடிக்கப் போகிறீர்கள்?

ப: திப்புவைப் போல் வாளெடுத்து, புரவி மீது ஏறி எதிரிகள் மீது என்னால் போர் தொடுக்க முடியுமா என்ன...! என்னை எதிர்ப்பவர்களை யார் என்று இனம் கண்டு கொள்ளவே முடியவில்லையே! ஏதோ, நீதிபதிகளின் சத்புத்தியை நம்பி தர்ம யுத்தம் தான் நடத்த முடியும்! 'செகுலர் ஸ்டேட்' என்று இன்றைக்குப் பெருமைபட்டுக் கொள்கிறோமே....! அந்த நாட்களிலேயே மதச் சார்பின்மைக்கு வித்திட்ட ஒரு மன்னனைப் பற்றியத் தொடரைத் தடை



...50 ஆம் பக்க விடைகள்:

1. ராமகிருஷ்ண ஹெக்டே, 2. தேவி லால், 3. என். டி. ராமராவ், 4. அனுமந்த ராவ், 5. எஸ். ஆர். பொம்மை, 6. ஜெய லலிதா.

தொகுப்பு: ஜே. எஸ். நாராயணன்.

செய்து அரசு தன்னைத் தாழ்த்திக் கொள்ளாது என நினைக்கிறேன். நான் நம்பிக்கை இழக்கவில்லை!

கே: நீங்கள் ஒரு முஸ்லிமாக இருந்து கொண்டு, ஒரு முஸ்லிம் மன்னரைப் புகழும் வகையில் படமெடுப்பதால் இந்த எதிர்ப்பு கிளம்பியிருக்கக் கூடுமோ?

ப: அப்படி யாரேனும் நினைத்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்! உண்மையில் மகாபாரதத்தை டி.வி.க்குத் தயாரிக்க வேண்டுமென்ற எண்ணம் முதலில் எனக்குத்தானிருந்தது; இன்றைய மகாபாரதத் தயாரிப்பாளர்களுக்குக் கூட அது தெரியும்! நான் எடுத்து வெளியிட்ட 'அப்துல்லா' படம், அரசாங்கத்திடமிருந்து வரிவிலக்குப் பெற்று 'ஓஹோ' என்று ஓடியது! ஏன், திப்புசுல்தானிலேயே, பூர்ணையா, சேகர், கிருஷ்ணராவ், நாராயணராவ், அப்பாசாஹிப் என்று முக்கால்வாசியும் இந்து கதாபாத்திரங்கள் தான்! என் வீட்டிலும் யூனிட்டிலும் பெரும் பகுதியினர் இந்துக்கள்தான். மஸ்கட்டிலிருக்கும் என் மிக நெருங்கிய நணபன், தியாகராஜன் ஒரு இந்துதான்! அரசியல்வாதிகளுக்குத்தான் இந்து — முஸ்லிம் என்ற பிரிவினை வாதம், கலை உலகில் இந்தச் சிறுமதித்தனம் நுழையவில்லை என்றே எண்ணுகிறேன்.

கே: அரசியலில் ஈடுபடும் எண்ணமுண்டா?

ப: கண், காது, வாய் எல்லாவற்றையும் மூடிக் கொண்டு 'பலிகடா' போல் தலையை மட்டும் ஆட்டத் தெரிந்தவர்கள்தான் அரசியலில் நுழைய முடியும்; அது எனக்கு ஒத்துவராது! ஆனால் நிறைய அரசியல்வாதி நண்பர்கள் எனக்குண்டு! குண்டுராவ், வீரேந்திரபாடீல், ஹெக்டே, எம்.ஜி.ஆர். இப்படிப் பலர். இதில் எம். ஜி. ஆரின் ஞாபக சக்தியும் பொறுமையும் என்னை மிகவும் கவர்ந்த விஷயம்! ஒருமுறை குண்டுராவ் தலைமை வகித்த கூட்டத்தில் நான் கலந்து கொண்டேன்! அந்தக் கூட்ட நெரிசலில் எம். ஜி. ஆர். என்னைத் தேடி வந்து "என்ன சஞ்சய் சௌக்யமா?" என்கிறார்! எப்போதோ யாரோ செய்து வைத்த அறிமுகத்தை நினைவில் வைத்துக் கொண்டிருந்திருக்கிறார்! கூட்டம் அலைமோதி அவர் மேலேயே விழுந்து விட்டது. ஆனாலும் கொஞ்சம் கூட எரிச்சலடையாது, 'பரவாயில்லை பரவாயில்லை' என்று சிரித்த வண்ணமிருந்தார்! நானும் அவரும் ஒரே மகர ராசி (Capricorn)க்காரர்கள்! இருவருமே பயங்கர விபத்திலிருந்து தெய்வாதீனமாகத் தப்பி நடிப்பைத் தொடர்ந்தவர்கள்!

கே: உங்களைச் சினிமா உலகுக்குத் திசை திருப்பிய சம்பவங்கள் ஏதேனுமுண்டா?

ப: நான் பெங்களூரில் பிறந்து வளர்ந்தவன். 'ஜர்மன்ஸ்' ஹைஸ்கூலில் படித்தேன். தமிழர்கள் நிறைய வசித்த கண்டோன்மெண்ட் பகுதியில் வசித்தேன். நிறையத் தமிழ் பேசுவேன். சின்ன வயசிலிருந்தே சினிமா ஆசை நிறைய உண்டு; 'வாத்தியார்' படமென்றால் முதல் 'ஷோ'வே பார்த்து விட வேண்டும்! மூன்றணா கொடுத்தால் முதல் வரிசையில் உட்கார்ந்து பார்க்கலாம்; ஆனால் வீட்டில் கண்டிப்பு! காசு கிடைக்காது! அதனால் பாட புத்தகங்களை அவ்வப்போது அதே தெருவிலிருந்த ஒரு தமிழ்க் கடைக்காரரிடம் விற்று, காசு வாங்கிச் சினிமா பார்த்து வந்தேன். கடைக்காரர் சந்தேகப்பட்டு என் அப்பாவிடம் கொண்டு நிறுத்தி விட்டார். அன்று வாங்கின அடி உதையை என் வாழ்நாளில் மறக்க முடியாது. அப்போது எடுத்த முடிவுதான் — நானே பிற்காலத்தில் திரைப்படத் துறையில் ஈடுபட்டு, பலரை என் படங்களைப் பார்க்கச் செய்ய வேண்டுமென்பது!

கே: மைசூர் தீ விபத்து அஜாக்கிரதையினால் ஏற்பட்டது என்கிறார்களே! நீங்கள் பட்டாசு மத்தாப்புக்களை மூடிய அறையில் கொளுத்த எங்ஙனம் அனுமதித்தீர்கள்?

ப: ஐயோ! அதைப் பற்றி மட்டும் கேட்காதீர்கள்; நினைத்தாலே நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது; நான் எந்தப் பட்டாசையும் மத்தாப்பையும் கொளுத்தும்படி சொல்லவில்லை; நான் பாட்டுக்குப் பக்கத்திலிருந்த அறையில் ஒரு படுக்கையில் சாய்ந்தவாறு அடுத்த காட்சியைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன்; திடீரென்று ஒரே புகை, தீ, கூக்குரல்... பயங்கரம்! நான் எப்படித் தப்பினேன் என்பது ஆண்டவனுக்குத்தான் தெரியும். திப்புசுல்தானை எப்படியும் முடித்து வெளியிட வேண்டுமென்ற என் தீவிரத்தைக் கண்டு ஆண்டவனே மனமிரங்கினான் போலும்! அவனே இப்போது ஏற்பட்டுள்ள தாற்காலிகத் தடையையும் வெற்றி கொள்ள எனக்கு உதவுவான் என்று நம்புகிறேன்!

— ஜெயஸ்ரீராஜ்

அறிவுரை சொன்ன மறுநாளே நாடகக் கம்பெனி மேனேஜருடன் தன் மனைவி ஓடிப் போய் விட்டதை, குரல் தடுமாற பாபு சொன்ன விதம் வந்தனாவை மிகவும் பாதித்தது.

திடீரென்று அவளுக்கு மனம் கனத்துப் போனது. நேரில் சந்தித்திராத அந்தப் பெண் தாரா மேல், ஒரு ஜன்ம விரோதி மேல் ஏற்படும் ஆத்திரம் அக்னிப் பிழம்பாகத் துடித்தது.

ச்சே! இப்படியும் ஒரு பெண் நடந்து கொள்வாளா? தன் கணவனுக்குத் துரோகம் இழைப்பதே எவ்வளவு பெரிய தவறு. அத்தனைப் பெரிய தவறை மன்னிக்க முன்வந்த சகிப்புத்தன்மை மிக்க ஒரு கணவனுக்கு, நிரந்தரமான ஒரு துரோகத்தைச் செய்ய எப்படி மனம் வரும்?

''அப்புறம் என்னாச்சுங்க?'' என்றாள் வந்தனா.

ஒரு பெருமூச்சை வெளியேற்றி விட்டு விரக்தியாகச் சிரித்தார் பாபு.

''எனக்கு அப்பக்கூட அவளைத் தேடிப் பிடிச்சி ஏதாச்சும் செய்துடணும்னு வெறி ஏற்படலை. மிதிக்கக் கூடாததை மிதிச்ச ஒரு அருவருப்பு மட்டும்தான் மனசுல ஏற்பட்டுச்சு. நாயைக் குளிப்பாட்டி நடு வீட்ல வச்சாலும்...னு ஒரு பழமொழி சொல்வாங்களே, அது மாதிரி அவ நல்ல பொண்ணில்லைன்னு ரொம்ப தாமதமாப் புரிஞ்சுக்கிட்டது என் தப்பு. ஆனா அவ மேலே ஒரு பரிதாபம் கூட ஏற்பட்டுச்சு. அந்த மானேஜர் சபல புத்தி உள்ளவன்னும், பல பெண்களை ஏமாற்றினவன்னும் கேள்விப்பட்டப்போ அய்யோ பாவமேன்னு இருந்துச்சு.''

இமைக்காமல் அவரையே கைகளைக் கட்டிக் கொண்டு பார்த்த வந்தனாவின் விழிகளில் இலேசாகக் கலக்கம் ஏற்பட்டது. அவர் தொடர்ந்தார்:

''பின்னே இல்லையா? தாரா என்னைப் பிடிக்காம அந்த மேனேஜரோட ஓடினது தப்பா இருந்தாக்கூட, அவன் கடைசி வரைக்கும் வச்சுக் காப்பாத்துவானான்னு பார்த்திருக்கக் கூடாதா? வெளியூர் அழைச்சுட்டுப் போன அவன் இவ கொண்டு போன பணமும், அவனுக்கு இவ மேலே இருந்த ஆசையும் தீர்ந்து போனதும் அம்போன்னு விட்டுட்டு வேற எங்கேயோ ஓடிட்டான்னு அப்புறம் கேள்விப்பட்

## வல்லமை தாராயோ?





## வீரபாண்டித் தொகுதி வாசகர்களுக்கு நினைவூட்டுகிறோம்!

கல்கி 'மாதம் ஒரு தொகுதி' திட்டத்தின் கீழ் குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் தொகுதி உங்கள் தொகுதிதான். உங்கள் எம். எல். ஏ. தொகுதிக்கு என்னென்ன செய்துள்ளார் அல்லது செய்யவில்லை; தொகுதி அபிவிருத்திக்கு உங்கள் யோசனை என்ன? உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு, உங்கள் கடிதங்கள் மார்ச் 14க்குள் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள். — ஆசிரியர்.

டேன்.''

''அவளுக்கு வேண்டியதுதான் சார்!''

''இங்கே நான், தாரா அவ அம்மா வீட்டுக்குப் போயிருக்கிறதாப் பொய் சொல்லிச் சமாளிச்சுப் பார்த்தேன். எத்தனை நாளைக்குப் பொய்யைத் தொடர முடியும்? 'உங்க பெண்டாட்டியை இன்னொருத்தனோட பெங்களூர்ல பார்த்தனே'ன்னு ஒருத்தன் வந்து சொன்னான். போதாதா? ஊர் பூராத் தெரிஞ்சு போய் எனக்கு ஏற்பட்ட அவமானம்! என் முகத்துக்கு எதிரா அனுதாப முகம் காட்டினவங்க அத்தனை பேரும் முதுகுக்குப் பின்னால சிரிச்சாங்க. கை காமிச்சுப் பேசினாங்க. நான் மன்னார்குடியை விட்டு கைக்குழந்தையோட புறப்பட்டு மெட்ராஸ் வந்துட்டேன். இங்கே ஒரு நாடக கம்பெனில சேர்ந்தேன். சசிகலாவை வளர்க்கறதுக்கு நான் பட்டபாடு ஆண்டவனுக்குத்தான் தெரியும். மெட்ராஸ்ல யார் கேட்டாலும் என் பெண்டாட்டி செத்துப் போய்ட்டதாத்தான் சொல்றேன். சசிகலாவும் அப்படித்தான் நம்பிக்கிட்டிருக்கா. நடந்த உண்மைகளை எல்லாம் குழந்தைகிட்டே சொல்ல முடியுமா? சொன்னா புரியுமா? புரிஞ்சிட்டா அந்த பிஞ்சு மனசு தவிச்சுப் போய்டாதா?''

''நியாயம்தான்'' என்றாள் வந்தனா.

சற்று நேரம் அங்கே மௌனம் நிலவியது.

''இப்பவும் அவ... பெங்களூர்லதான் இருக்காளா?''

''இல்லை, பம்பாய்ல.''

''சசிகலாவைப் பார்க்கணும்னு அவளுக்குத் தோணவே இல்லையா? அதுக்கு முயற்சி எதுவும் செஞ்சாளா?''

அமைதியாகத் தலையை குறுக்கில் அசைத்தார்.

''என்ன செய்றா பம்பாய்ல?''

''சிவப்பு விளக்கு பகுதில இருக்கா.''

வந்தனாவுக்கு இது மற்றும் ஒரு அதிர்ச்சியாய் இருந்தது.

''ஒரு நல்ல புருஷனையும், அழகான குழந்தையையும் விட்டுட்டு ஓடினவளுக்கு இந்த நிலைமை அவசியம்தான்! இந்தத் தண்டனை தேவைதான்!''

''தாரா பம்பாய்ல இந்த நிலைமைல இருக்கிற விவரமே எனக்கு எப்படித் தெரிஞ்சுது தெரியுமா? ஒரு தமிழ்ப் பேப்பர்ல, ஞாயிறு ஏடுல, பம்பாய் சிவப்பு விளக்குப் பெண்களைப் பத்தி ஒரு கட்டுரை போட்டாங்க. அதிலே வெளியாகியிருந்த அந்தப் பகுதிப் பெண்களின் ஒரு க்ரூப் போட்டோவில் தாராவும் இருந்தாள்...

பாபு அலமாரி திறந்து அந்த பேப்பரை எடுத்து வந்து, பக்கம் புரட்டி இவளிடம் கொடுத்தார்.

''இதையெல்லாம் எப்படி உங்களால ஜீரணம் செஞ்சிக்கிட்டு அமைதியா இருக்க முடிஞ்சது?'' என்றாள்.

''அவளோட துரோகத்தைக் கண்ணால பார்த்தப்ப ஏற்பட்ட அதிர்ச்சியை விடப் பெரிய அதிர்ச்சி எதுவும் இல்லைங்க. அந்த அவமானத்தை விழுங்கினதால, அப்புறம் எல்லாமே மரத்துப் போச்சு. புத்தகத்தில படிச்சுட்டு என் சொந்தக்காரங்க எல்லாம் மேல மேல கேலி பண்ணினாங்க. அப்புறம் நான் யார் வீட்டுக்கும் போறதில்லை. எந்தக் கல்யாணத்திலேயும் கலந்துக்கிறதில்லை.''

வந்தனாவுக்கு வியப்பு மேலிட்டது. இவ்வளவு பொறுமையாக ஒரு ஆண்! இதுவரை சந்தித்ததில்லை. இவ்வளவு மோசமான ஒரு பெண்! இதுவரை கேள்விப்பட்டதில்லை. காதலனை நம்பி ஊரை விட்டுப் புறப்பட்டு வந்து, அவன் ஏமாற்றி விட, தவறான பாதையில் வழி தடுமாறின பெண்களைப் பற்றிப் படித்திருக்கிறாள். திருமணமாகி, குழந்தையும் பெற்று ஒரு குடும்பப் பெண்ணாக இருந்தவள் இப்படிக் கீழ்த்தரமாக மாறி... என்ன பெண் அவள்!

''இன்னொரு விஷயம் நான் சொல்லவே இல்லையே'' என்றார் பாபு.

என்ன என்பது போல் நிமிர்ந்து பார்த்தாள்.

''இந்த லட்சணத்தில எங்க கல்யாணம் காதல் கல்யாணம்! ஆமாங்க, நான் அவளை அவ்வளவு நேசிச்சேன். அவளும் என்னை நேசிச்ச மாதிரிதான் தெரிஞ்சது. காதலர்கள் செய்ற எல்லா பைத்தியக்கார செயல்களையும் நாங்களும் செஞ்சோம். கல்யாணத்துக்கப்புறம் அவளை ஒரு சின்ன வேலை கூடச் செய்ய விட மாட்டேன். நான் நல்லா சமைப்பேன். அதனால பாதி நாள் அவளை உட்கார வச்சி நான் சமைப்பேன். தண்ணி இறைக்கிறதிலேர்ந்து, பாத்திரம் கழுவறது.. துணி துவைக்கிறது எல்லாம் செய்வேன். என் ஃபிரண்ட்ஸ் கிண்டல்

செய்வாங்க. அதையெல்லாம் பொருட்படுத்த மாட்டேன். அவ கை நோகக் கூடாதுன்னு நான் உழைப்பேன். அவ கர்ப்பமானது உறுதியான நிமிஷத்திலேர்ந்து தூங்கறது, உக்காந்து புக்ஸ் படிக்கிறது தவிர வேற எந்த வேலையும் செய்ய விட்டதில்லை. அவ மனசு கொஞ்சம் வருத்தப்பட்டாக் கூட என்னால தாங்க முடியாது. அப்படி ஒரு வெறித்தனமான பாசம் அவ மேல நான் வச்சிருந்தேன். ஒருவேளை அதனாலதான் அவ துரோகம் செஞ்சப்ப கூட அதிகப்படியா என்னால ஆத்திரப்பட முடியலையோ என்னவோ...''

வந்தனாவுக்கு இப்போது மிகவும் தர்ம சங்கடமாக ஆகி விட்டது. அம்மா படம் எங்கே என்று ஆரம்பித்ததால் இவ்வளவையும் இவர் நினைத்துப் பார்க்க வேண்டியதாயிற்று. இனிய நினைவுகள் என்றால் எப்போதும் இனிக்கும். நினைத்துப் பார்த்து ரசிக்கக்கூடிய நினைவுகளா இவை? மனம் சகஜநிலைக்குத் திரும்ப எப்படியும் ஒரு வாரமாகும்.

''மன்னிச்சிடுங்க சார். உங்க மனைவியைப் பத்தி ஆர்வமாக் கேட்டு உங்களைப் பழசையெல்லாம் நினைச்சுப் பார்க்க வச்சிட்டேன்'' என்றாள் வந்தனா.

''நீங்க கேட்டப்பவும் அவ படம் பூஜை ரூம்ல இருக்குன்னு சொல்லியிருந்தா விஷயம் அத்தோட முடிஞ்சிருக்குமே. நான் மெட்ராஸ் வந்து இத்தனை வருஷமானதில, இந்த உண்மைகளை எல்லாம் சீதாராமன்னு ஒரு நெருக்கமான நண்பன் கிட்டே சொல்லிருக்கேன். அதுக்கப்புறம் உங்ககிட்டேதான் சொல்லியிருக்கேன்.''

''கவலைப்படாதீங்க சார். உங்களோட அந்தரங்க துக்கங்களைப் பகிர்ந்துக்கற அளவுக்கு எனக்கு மதிப்பு கொடுத்துச் சொல்லியிருக்கீங்க. அந்த நம்பிக்கையைக் காப்பாத்துவேன். என் மூலமா இதெல்லாம் யாருக்கும் போகாது.''

''அதில்லை. நான் சொல்ல வந்தது அதில்லை. நீங்க வெளில சொல்லிடுவீங்களோங்கிற பயமெல்லாம் இல்லை. என் மனைவியைப் பத்தி உங்ககிட்ட இவ்வளவு விவரமாச் சொன்னதுக்குக் காரணம் இருக்கு.''

''என்ன?''

பாபு உடனே பதில் சொல்லாமல் ஜன்னலில் அசையும் திரைச் சீலையை, கடிகாரத்தில் ஆடும் பெண்டுலத்தைப் பார்த்துவிட்டு, அவளை நேராகப் பார்த்தார்.

''ஆம்பளைங்க எல்லாரும் சுயநலம் பிடிச்சவங்க, பொம்பளைங்க எல்லாம் தியாகிங்கன்னு ஆவேசமாச் சொன்னீங்களே. அப்படியில்லை — பொம்பளைங்களிலேயும் சுயநலம் பிடிச்சவங்க இருக்காங்க, ஆம்பளைங்களிலேயும் பொறுமைசாலிங்க இருக்காங்கன்னு நீங்க உணரணும்னுதான்



'' நம்ம மானேஜர் அதிகமா லஞ்சம் வாங்கறதைப் பியூன் காட்டிக் கொடுத்துட்டான்!''

'' எப்படி?''

'' லஞ்சாதி லஞ்ச, லஞ்ச மார்த்தாண்ட லஞ்சகுலதிலக, லஞ்ச கம்பீர மன்னர் வருகிறார் பராக், பராக்'னு சொன்னானே!''

— எஸ். முகம்மது யூசுப்.

● ● ● ● ● ● ● ● ● ●

உண்மைகளைச் சொல்ல ஆரம்பிச்சேன். ஒருத்தனை நினைச்சா கடைசி வரைக்கும் அவனைப் பொம்பளைங்க மறக்க மாட்டாங்கன்னு சொல்வாங்க. என் தாரா விதிவிலக்கு. சும்மா பெருமைக்காக நான் சொல்லிக்கலை. 'அவதான் ஓடுகாலியாய்ட்டா, கைக் குழந்தையை வச்சிக்கிட்டு ஏன் அவதிப்படறே. இரண்டாம் கல்யாணம் செய்துக்கோ'ன்னு நிறையப் பேர் சொன்னாங்க. நான் மறுத்துட்டேன். அவ துரோகம் செஞ்சாளோ, ஓடிப் போய்ச் சீரழிஞ்சாளோ... அதெல்லாம் அப்புறம். நான் நேசிச்சப்ப நல்லா இருந்தா. அது பொய் இல்லை. என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டுச் சசிகலாவைப் பெத்த வரைக்கும் உண்மையா இருந்தா. அந்தத் தாராவை என்னால மறக்க முடியலை. கல்யாணம்ங்கிறது ஒரு தடவைதான்னு நம்பறவன் நான். இன்னிக்கும் பத்து கோடி ரூபாயை வச்சி, உலக அழகியைக் கொண்டு வந்து நிறுத்தி, கல்யாணம் பண்ணிக்கச் சொன்னாலும், மாட்டேன்னுடுவேன். ஒரு மாதிரி அசடுன்னு வேணும்னாலும் என்னை நினைச்சுக்கங்க.''

''சேச்சே! அப்படியெல்லாம் நினைக்கலை சார்.''

''ஒரு பொண்ணுக்குத் தான் நேசிக்கிறவனைக் காட்டிலும், தன்னை உண்மையா நேசிக்கிறவன் வாழ்க்கைத் துணையா அமையறதுக்குக் கொடுத்து வச்சிருக்கணும். எதுக்காக நான் சொல்ல வர்றேன்னா.. உங்களை உண்மையா நேசிக்கிற அந்த அரவிந்தை நீங்க ஏன் குதர்க்கமாப் பார்க்கறீங்க?'' என்று பாபு கேட்டதும்...

வந்தனாவுக்குச் சுருக்கென்று உள்ளே தைத்தது.

(தொடரும்)

# 'ஜெ'க்கு ஏற்பட்ட விபத்துக்கு அரசியல் பின்னணி உண்டா?

* விபத்தில் அரசியலா?

* பி. ராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.

**? முதல்வர் கருணாநிதி கள்ளுக் கடைகளை மீண்டும் திறப்பாரா?**

! இப்போதைக்கு மலிவு விலை பீர் தயாரிப்பில் விநியோகத்தில் தமிழக அரசு இறங்கியிருக்கிறது.

* ஆ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

**? சமீபத்தில் தங்கள் மனத்தை மிகவும் பாதித்த சம்பவம் எது?**

! கடந்த பிப்ரவரி 22 — ஆம் தேதி சென்னையிலிருந்து கோவளம் சென்ற பஸ்ஸில் (A.19) நமது நிருபர் பயணப்பட்டுக் கொண்டிருந்தார். உத்தண்டியைத் தாண்டிய பிறகு பஸ்ஸிலிருந்து லுங்கி அணிந்த இருவர் பஸ்ஸை நிறுத்தி, இறங்கி, தெரு ஓரத்தில் வைத்திருந்த சாராயக் கேன்களைத் தூக்கிக் கொண்டு மறுபடி பஸ்ஸில் ஏறினார்கள். டிரைவர் ஒன்றும் கேட்கவில்லை எனில் கண்டக்டர் லக்கேஜ் டிக்கெட் கொடுத்தார்! மேலும் சுமார் ஒரு மைல் சென்று, பஸ் மறுபடி நிறுத்தப்பட்டு அவர்கள் இறங்கிக் கொண்டார்கள். பண்ருட்டி சம்பவத்துக்குப் பிறகும் இந்த நிலை நீடிப்பது மனத்துக்கு கஷ்டமாகத் தான் இருக்கிறது.

* ம. சண்முகசுந்தரம், பா. மேட்டூர்.

**? ஜோதிடத்தில் உங்களுக்கு எந்த அளவுக்கு நம்பிக்கை இருக்கிறது?**

! ''எதிர்காலத்தில் எனக்குக் கஷ்டம் வரப் போகிறது என்றால், அதை இப்போதே அறிந்து கொண்டு, அதைப் பற்றி விசனப்பட்டுக் கொண்டிருக்க நான் தயாராயில்லை. எதிர்காலத்தில் எனக்கு நல்லது நடக்கப் போகிறது என்றால், அது நடக்கும் போது ஏற்பட வேண்டிய சந்தோஷத்தை, இப்போதே அது பற்றி தெரிந்து கொண்டு விடுவதன் மூலம் குறைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. எனவே, எனக்கு ஜோதிடம் தேவையில்லை'' என்பது அமரர் கல்கியின் கருத்து. அதையே பின்பற்றுகிறவன் நான். கடமைகளைக் கருத்தூன்றிச் செய்து வருகிறோமா என்பதுதான் முக்கியம்.

* ரமேஷ் ராம், செங்குன்றம்.

**? ஜெயலலிதாவுக்கு ஏற்பட்ட விபத்து சாதாரண விபத்தா? அல்லது, அரசியல் பின்னணி காரணமா?**

! எல்லா விஷயங்களையும் அரசியலாக்கி ஆதாயம் தேடப் பார்க்கிறவர்கள், இந்த விபத்தையும் அவ்வாறே சுயநலத்துக்குப் பயன்படுத்தப்பார்க்கிறார்கள். ''என்னைக் கொலை செய்ய நடந்த சதி'' என்று 'ஜெ' கூறுவதும், அந்தக் கூற்றுக்கு ஜால்ரா போடுவது போல வாழப்பாடியார் அறிக்கையும் அனுதாப வோட்டுக்களை ஓரளவு பெற்றுத் தரலாம்; ஆனால் உண்மையாகி விடாது. ''கொலை, சதி'' என்றெல்லாம் ஆர்ப்பாட்டம் பண்ணு முன்னர், தலைவர்கள் சில கேள்விகளைத் தாங்களே கேட்டுக் கொள்வது நல்லது: இரவு நேரக் கார்ப் பயணம் அவசியமா? டிரைவருக்குப் போதிய அளவு உறங்க ஓய்வு தருகிறோமா? டிரைவரைக் கார் ஓட்டச் சொல்லி விட்டுப் பயணம் செய்யும் மற்றவர்கள் தூங்குவது சரியா? லாரிக்குக் குறுக்கே ஒரு பசு வந்து உயிரை விட்டதே, அது கூட ஜெயலலிதாவைக் கொலை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் செயல்பட்டதா?

* வண்ணை கணேசன், சென்னை.

**? நடிகைகள் ஏன் இப்போது கதை எழுதுவதில்லை?**

! பூத எழுத்தாளர்களின் சாயம் வெளுத்து விட்டதுதான் காரணம்.

* டி. தே. ஜானி பிரபாகரன், குடியாத்தம்.

**? பிரதமர் வி. பி. சிங்கும் ராஜீவ் காந்தியும் போட்டி போட்டுக் கொண்டு தேர்தல் இறுதிக்கட்டப் பிரசாரம் செய்தது குறித்து...?**

! ராஜீவ் மன்னிப்புக் கோரியது பரிதாபமாக இருந்தது. வி. பி. சிங், தமது கட்சியைச் சேர்ந்த வேட்பாளர் என்றாலும்,

* சட்டசபைக் கலைப்பு



* மதிப்பு தகர்ந்தது



அவர், விரும்பத்தக்க குணநலன்களை உடையவர் அல்ல என்று தெரிய வந்த போது, அவருக்காகப் பிரசாரம் செய்யாமல் திசைமாறிச் சென்றதுடன், 'மக்கள் சரியான தீர்ப்பு வழங்குவார்கள்' என்று கூறியது மிகுந்த மனநிறைவைத் தந்தது.



* கள்ளுக்கடை திறப்பாரா?

*** கிஷோர், திருச்சி.**

**? ஜக்மோகன், ஜம்மு — காஷ்மீர் சட்ட சபையைக் கலைத்து விட்டாரே?**

! அந்த நடவடிக்கை, மத்திய அமைச்சரவைக்கே ஓர் எதிர்பாராத அதிர்ச்சி என்பது தான் விசேஷம்! இதுபோன்ற அதிர்ச்சிகளுக்கு மீண்டும் இடம் தராமல், மத்திய அரசின் ஒப்புதலோடு அவர் முக்கியமான முடிவுகளை எடுப்பதுதான் நல்லது. சின்னச் சின்ன விஷயங்களுக்கு டில்லிக்கு ஓடவும் வேண்டாம்; பெரிய விஷயங்களில் "தகவல் தொடர்பு இடைவெளி" இருக்கவும் வேண்டாம்.

*** அ. முஸ்தபா, நக்கோலம்.**

**? எட்டு ரன்களில் இரண்டாவது சதத்தை நழுவ விட்ட அஸாருத்தீன் ஆட்டத்தைப் பற்றி?**

! டபுள் செஞ்சுரி கை நழுவிப் போனதில் ஏற்பட்ட ஏமாற்றத்தை, மொத்தத்தில் நமது அணிக்குக் கிடைத்துள்ள ஊக்க போனஸ் இட்டு நிரப்பி விட்டது!

*** எல். மாறன், மேல்பட்டி.**

**? பழனி தொகுதியில் எம். ஜி. ஆர். வேட மணிந்த இளைஞருடன் இ. காங்கிரஸ் வேட்பாளர் வோட்டு வேட்டையாடியது குறித்து?**

! டி. ராஜேந்தரின் மகன், சிறுவன் சிலம்பரசன் வோட்டு கேட்பதை விட இது தேவலாம் என்றாலும், நமது வாக்காளர்களை எளிதில் ஏமாற்றி விடலாம் என்கிற வேட்பாளர்களின் எண்ணத்தையே இவை பிரதிபலிக்கின்றன. "இத்தகைய நாடகங்களைக் கண்டு ஏமாற மாட்டோம்; கொள்கை அடிப்படையில்தான் வோட்டுப் போடுவோம்" என்று உணர்த்த வேண்டியது வாக்காளர் கடமை.

*** ஆர். திலகவதி, சென்னை — 23.**

**? வி. பி. சிங், அவர் மகன் அஜய்சிங் மீது செயின்ட் கிட்ஸ் ஊழல் புகார் சுமத்தப் பட்டதானது, பூமராங்காக மாறி, திருப்பித் தாக்கிவிட்டதே?**

! இந்த அசிங்கமான, மட்டமான, அநாகரிகமான, கேவலமான காரியத்தில் பி. வி. நரசிம்மராவும் பங்கேற்றிருந்தார் என்பதுதான் மிகப் பெரிய அதிர்ச்சி! பூமராங் அவரை மட்டுமின்றி, அவரிடம்



* பரிதாபம்



* மனநிறைவு

நாம் வைத்திருந்த மதிப்பையும் தாக்கித் தகர்த்து விட்டது.

*** கோ. சு. சுரேஷ், கோவை.**

**? தினந்தோறும் தேதி கிழிக்கும் போது என்ன உணர்வு ஏற்படும்?**

! இறையுணர்வு.

*** டி. சீனிவாசன், சென்னை — 79.**

**? "சட்டசபைத் தேர்தலில் எல்லா மாநிலங்களிலும் இ.காங்கிரஸ் தோற்கும்" என்கிறாரே, என். டி. ராமராவ்?**

! யார் தோற்கிறார்களோ, யார் ஜெயிக்கிறார்களோ, நாகரிக ஜனநாயக அரசியல் தோற்று விட்டது என்பது உறுதி. திரும்பின பக்கமெல்லாம் வன்முறை, உயிர்ப் பலி, வோட்டுச் சாவடியைக் குண்டர்கள் கைப்பற்றுதல் எனில் இரண்டு விஷயங்கள் தெளிவாகின்றன: அரசியலில் புகுவதில் ஆதாயம் இருப்பதைக் குண்டர்கள் புரிந்து கொண்டு விட்டனர் என்பது ஒன்று. நேர்மையான அரசியலைத் துறந்து, குண்டர்களின் துணையை அரசியல் கட்சிகள் — அதன் தலைவர்கள் — நாட ஆரம்பித்து விட்டன என்பது இரண்டாவது.

* ரூ. 20 பரிசு பெறுபவர்!
டி. தே. ஜானிபிரபாகரன்,
531, தாழையாத்தம் —
கட. நகர் சாலை,
குடியாத்தம் — 632 602.

# 16 வது இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி

**1990**
**தீவுத்திடல், சென்னை 600009.**

எங்கும் மக்கள் வெள்ளம். ஒரே மகிழ்ச்சி வெள்ளம். கண்ணுக்கு விருந்து. கருத்துக்கு விருந்து. எந்தப்புறம் திரும்பினும் நெஞ்சை அள்ளும் கலைக் காட்சிகள். பலபல அம்சங்கள் அமைந்தவை.

சுற்றிப் பார்த்து களைத்து மகிழ பல்சுவை உணவு அளிக்கிறது ஓட்டல் தமிழ்நாடு.

**கண்ணுக்கு விருந்து:**

மீன் கண்காட்சி. அன்னை இந்திரா குழந்தைகள் உல்லாச உலகம். ரஷ்ய பொம்மலாட்டம். மேஜிக் ஷோ. சிரிப்பூட்டும் வீடு (Laughing House). பலூன்கள். கண்கவர் வண்ண நீர் ஊற்றுகள். குழந்தைகள் குதூகலிக்க குப்குப் உல்லாச ரயில். ராட்சச ராட்டினம். மூன் ரூப்பர் வீல். டோரா டோரா.

**கருத்துக்கு விருந்து:**

பொதுத்துறை, தனியார் துறைகளில் பெரிய தொழிற்சாலைகள் இப் பொருட்காட்சியில் பங்கு கொண்டுள்ளது.
காண அரிய வாய்ப்பு.
சிறப்பு நிகழ்ச்சிகள் பல உண்டு. வாருங்கள், காணத்தவறாதீர்கள்.



**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
25, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை, மைலாப்பூர்,
சென்னை-600 004. தொலைபேசி: 846843/846825.




**த**ன் முன் ஒப்புதலுக்காக வைக்கப் பட்ட ''டெண்டரை''ப் பார்த்த ஸேட்ஜி ஆச்சரியப்பட்டுப் போனார்.

''எண்பது லட்சத்திற்குள் வேலையை முடித்து விட முடியுமா, ராமன்ஜி!'' நம்ப முடியாமல் கேட்டார்.

ராமன் அந்த நிறுவனத்தின் 'திட்ட' இலாகாவின் தலைவர். அந்த நிறுவனம் பல பெரிய நிர்மாண வேலைகளை ஏற்றுக் கொண்டிருந்தது. கட்டடத்திற்கான வரை படங்களை வைத்து நிர்மாண வேலைக்கு என்ன செலவு ஆகும் என்பதைக் கணக் கிட்டுக், கணிசமான லாபம் சேர்த்து மதிப் பீடு செய்வது ராமனின் முக்கியமான பணி.

அந்த நிறுவனம் நிர்மாண வேலைகளில் நல்ல பெயர் சம்பாதித்திருந்தது. அரசாங் கத்தினரும் தனியார் பலரும் அதனிடம் கட்டுமானப் பணிகளை ஒப்படைத்து விட் டால் வேலை நல்லபடியாக ஆரம்பிக்கப் பட்டுக் குறித்த காலத்தில் முடியும் என்ற நம்பிக்கையுடன் இருந்தார்கள். மலையடி வாரத்திலிருந்து மேலே கோவில் சந்நிதி வரை போகக்கூடிய ஒரு பாதை அமைக்கத் தான் இந்த மதிப்பீடு கோரப்பட்டிருந்தது.

மதிப்பீடுகள் கோரி எல்லாப் பத்திரிகை களிலும் விளம்பரங்கள் வெளியிடப் பட்டன.

ஸேட்ஜியின் நிறுவனமும் இந்த வேலை யில் போட்டியிடத் தீர்மானித்தது.

அந்தச் சமயம் பார்த்து ராமனுக்கு எத்தனையோ பிரச்னைகள். மூத்த பெண் பிரசவத்திற்கு வீடு வந்து சேர்ந்திருந்தாள். இரண்டாவது பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகும் போல இருந்தது. அவர் தந்தைக்கு ஆஸ்பத்திரியில் அறுவைச் சிகிச்சைக்கு நாள் குறித்திருந்தார்கள்.

ஆகவே அவர் இந்த வேலையைத் தன் உதவியாளராக இருந்த ரமேஷிடம் ஒப்படைத்தார். ரமேஷ் துடிப்பான இளை ஞன். முன்னுக்கு வர வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவன். ''இதை மாத்திரம் நீ நல்லபடியாகச் செய்து முடி. ஸேட்ஜியிடம் சொல்லி உன்னை நல்ல நிலைக்குக் கொண்டு வருவது என் பொறுப்பு. என்ன?'' என்று உற்சாகமூட்டினார்.

அப்போதுதான் திருமணம் முடித்திருந்த ரமேஷ் இதை ஒரு சவாலாக ஏற்றுக் கொண் டான். தன் முன்னேற்றத்துக்கு இது ஒரு படிக்கட்டு என ராமன் சொல்வதைக் கேட் டுத் தீவிரமாக உழைத்தான். இரவு பகலாக, அலுவலகத்திலும் வீட்டிலுமாகப் பல மணி நேரங்கள் உழைப்பிற்குப் பின் மதிப்பீடு தயாராகியது.

தனியாகத் தானே மதிப்பீடு தயாரிப்பது

ஸரோஜி

இதுதான் அவனுக்கு முதல் தடவை. அப்படித் தயாரிக்கும் போது, செலவினங்களைக் குறைக்கப் பல யோசனைகள் அவனுக்குத் தோன்றின. அவற்றையெல்லாம் கூட விவரமாகக் குறிப்பிட்டுத் தன் மதிப்பீட்டைத் தயாரித்தான். ஒரு கோடிக்கு மேல் போகும் என நினைத்தது எண்பது லட்சத்திற்குள் முடிக்க முடியும் எனத் தெரிய வந்தது.

ராமன் அந்த மதிப்பீட்டைப் புரட்டிப் பார்த்தார். ''பிரமாதம்...! அமர்க்களமாகச் செய்திருக்கிறாய்.. தெளிவாக எந்தச் சந்தேகத்திற்கும் இடம் தராமல் தயாரித்திருக்கிறாய்.. பேஷ்!'' எனப் பாராட்டினார்.

''இந்த வேலை மட்டும் நமக்குக் கிடைக்கட்டும்.. நான் உன்னை ஸேட்ஜியிடம் அழைத்துப் போய், பதவி உயர்வுக்கும் கூடுதல் சம்பளத்திற்கும் சிபாரிசு செய்கிறேன்!'' என உறுதி அளித்தார்.

எதிர்பார்த்தபடியே இந்த வேலையை நிறைவேற்ற அந்த நிறுவனத்திற்கு ஒப்புதல் கிடைத்தது.

அதைக் கொண்டாட அலுவலகத்தில் ஒரு சிற்றுண்டி விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ராமன் தன் இலாகாவினருடன் கலந்து கொண்டார்.

ரமேஷ் பெருத்த எதிர்பார்ப்புடன் காத்திருந்தான். விருந்து முடிந்த பிறகு ராமன் தன்னைப் பற்றிச் சில வார்த்தைகள் ஸேட்ஜியிடம் கூறுவார் என நினைத்தான். தன் கடுமையான உழைப்பிற்குப் பலன் இல்லாமல் போகாது என நம்பினான்.

ஆனால் ராமன் ஏமாற்றி விட்டார்.

ரமேஷ் முகம் தொய்ந்து போயிற்று. எத்தனை சுயநலம் பிடித்த மனிதர்!

அடுத்த இதழில்.....




ராமனுக்கு இந்த வேலைக்காக 'போனஸ்' அறிவிக்கப்பட்டது. ரமேஷ் மேலும் கொதித்துப் போனான்.

தன்னறைக்குள் நுழைந்த ரமேஷை ஏறிட்டுப் பார்த்தார் ராமன்.

''வா! வா! உட்கார். நானே உன்னைக் கூப்பிடலாம் என்றிருந்தேன்!'' என்றார் சாதாரணமாக.

எதற்கு? நயிச்சியமாகப் பேசி, இன்னும் ஏதாவது வேலையைத் தலையில் கட்டவா?

ரமேஷ் உட்காரவில்லை. சுற்றி வளைக்காமல் நேரடியாக விஷயத்திற்கு வந்தான்.

''ஸார்! நான் இந்த வேலையை விட்டு விடலாம் என முடிவு செய்திருக்கிறேன்.''

தன் கையில் வைத்திருந்த ராஜினாமாக் கடிதத்தை அவரிடம் நீட்டினான்.

ராமன் அதைக் கையில் வாங்கிக் கொண்டார். ''குட்! நான் எதிர்பார்த்ததுதான்! உன்னுடைய திறமைக்கு நிச்சயம் நல்ல எதிர்காலம் உண்டு. எந்தக் கம்பெனியில் வேலை கிடைத்திருக்கிறது? எவ்வளவு தருகிறார்கள்? சொல்லலாம் என்றால் சொல்!''

''அப்படி ஏதும் இல்லை ஸார்! இனிமேல்தான் முயற்சி செய்ய வேண்டும்!''

அவருடைய முகம் சுருங்கியது. ''அப்படியானால் இந்த வேலையை எதற்காக விட வேண்டும்? அப்படி என்ன நிர்ப்பந்தம்?''

''மன்னிக்க வேண்டும், ஸார். அது என் சொந்த விஷயம். மிகவும் அந்தரங்கமான ஒரு வருத்தம். அதை மனத்தில் வைத்துக் கொண்டு தொடர்ந்து இங்கு வேலை செய்ய முடியாது எனத் தோன்றுகிறது..''

ராமன் யோசித்தார். ''மாதம் கிட்டத்தட்ட மூவாயிரம் ரூபாய் வரும் வேலையை இப்படிச் 'சட்'டென்று உதறித் தள்ளுவது எனக்கு விவேகமாகப்படவில்லையே, ரமேஷ்... என்னிடம் நீ மனம் விட்டுச் சொல்லக் கூடாதா?'' எனப் பரிவுடன் கேட்டார்.

''தயவு செய்து என்னை வற்புறுத்தாதீர்கள், ஸார்! நாம் பிரியும் போது சுமுகமாகப் பிரிவோம். மனக் கசப்பு ஏதும் வேண்டாம்,'' என்றான் கொதித்துப் போயிருந்த ரமேஷ்.

''ஓகே. நீ போக வேண்டும் எனத் தீர்மானித்து அதில் தீவிரமாக இருக்கும் போது நான் என்ன செய்ய முடியும்? அதற்கு முன்னால் நான் உன்னிடம் மன்னிப்பு கேட்க வேண்டும்.''

''பெரிய பெரிய வார்த்தைகள் எல்லாம் பேசாதீர்கள்.''

''அந்த 'டெண்டர்' விஷயமாக நான் உன் பெயரை ஸேட்ஜியிடம் சிபாரிசு செய்யவில்லை என உனக்கு வருத்தம் இல்லையா?''

''அப்படியெல்லாம் இல்லை ஸார்...''

''உன் முகமே சொல்கிறதே... என்னை ஒரு சுயநலக்காரன், சந்தர்ப்பவாதி, ஏமாற்றுக்காரன், பேச்சுத் தவறியவன் என்றெல்லாம் நினைத்திருப்பாய்.''

''நினைக்கவில்லை என்று சொன்னால் நீங்கள் நம்பப் போவதில்லை. அப்படியே நினைத்திருந்தாலும் என்ன பயன் ஸார், நான் எங்கே? நீங்கள் எங்கே?''

ராமன் தன் மேஜை இழுப்பறையைத் திறந்தார். அதிலிருந்து ஒரு ஃபைலை எடுத்துப் போட்டார்.

''நீ போட்ட எஸ்டிமேட்தான்.. கொஞ்சம் புரட்டிப் பார்..''

இதுவரை பார்க்காதது என்ன பார்க்கப் போகிறான்.. பக்கம் பக்கமாக அவன் மனத்தில் பதிந்ததுதானே..

ரமேஷ் அலட்சியமாகப் பிரித்தான், புரட்டினான். 'சட்'டென்று அவன் முகம் மாறியது. பல திருத்தங்கள் சிவப்பு மையில் ராமன் செய்திருந்தார்.

ரமேஷ் செய்த ஒரு சிறு தவறு.. அது பெரிதாக விஸ்வரூபம் எடுத்திருந்தது. ஒரு கோடியே ஒன்பது லட்சம் ரூபாய்க்குக் குறைவாக முடிக்க இயலாத வேலையை எண்பது லட்சத்திற்கு ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். கம்பெனிக்குக் கிடைக்கக்கூடிய லாபம் அடிபட்டுப் போனது மட்டும் அல்ல... கிட்டத்தட்டப் பத்து லட்சம் நஷ்டத்தில் நின்றது! இனி பின்வாங்க முடியாது. நிறுவனத்தின் பெயர் கெட்டுப் போகும்.

ரமேஷுக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. முகத்தில் பயம் பரவியது. இது என்ன கூத்து. கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது போல. எப்படி இந்தக் கவனக்குறைவு ஏற்பட்டது?. இப்போது என்ன செய்வார்கள்? வேலையை விட்டு அவர்களே விரட்டுவார்களோ?

ரமேஷின் வெளிறிய முகத்தை ராமன் பார்த்தார்.

''என் சொந்த வேலைகள் அதிகம் இருந்த காரணத்தால் உன்னிடம் நான் இந்தப் பொறுப்பை ஒப்படைத்தேன் — அது என் தப்பு. நீ போட்டுக் கொடுத்ததை முழுமையாகச் சரிபார்க்காமல் கையெழுத்திட்டு மேலே அனுப்பினேன் — இரண்டாவது தப்பு. ஸேட்ஜி சந்தேகப்பட்டுக் கேட்ட பிறகும் கூட, நான் மறுபடி பரிசீலிக்காதது மூன்றாவது தப்பு.

''ஐ'ஆம் வெரி ஸாரி, ஸார். எப்படி இந்தத் தப்பை நான்...''

''பொறு ரமேஷ். சிற்றுண்டி விருந்து நாலு மணிக்கு. உன்னைப் பற்றிப் பெரிதாகப் பேச வேண்டும் எனத் தீர்மானத்துடன் தான் அன்று வந்தேன். மூணரை மணிக்கே இந்தத் தப்பு என் கண்ணில் பட்டது. ஊன்றிப் பார்க்க நேரம் இல்லை. உன்



அமெரிக்க டி.வி.யில் தினந்தோறும் இரவு பத்து மணிக்கு இந்தக் கேள்வி எழுப்பப்படுகிறது:

''இப்போது நேரம் இரவு மணி பத்து. உங்களுக்குத் தெரியுமா, இந்த நேரத்தில் உங்கள் குழந்தைகள் எங்கிருக்கிறார்கள் என்று?''

— சத்தி. ஏ. ஜே. ஜப்பார்.

பெயரை இப்போது சொல்ல வேண்டாம். எனத் தீர்மானித்தேன். எல்லாவற்றையும், ஊதிய உயர்வு உள்பட, ஏற்றுக் கொண்டேன்.''

''அன்று இரவு நான் தூங்கவில்லை. உண்மையை அப்படியே ஸேட்ஜியிடம் சொல்லி உன்னைக் காட்டிக் கொடுத்திருக்கலாம். எனக்கும் தண்டனை உண்டு. ஆனால் பெரிதாக இராது. என்னால் இந்தக் கம்பெனி வளர்ந்திருக்கிறது. ஆனால், உனக்கு வேலை போகும். இங்கு பார்த்த 'சர்வீஸை' நீ வெளியில் சொல்ல முடியாது. சொன்னால் வேலையை விட என்ன காரணம் என்று கேட்பார்கள். கம்பெனியிலும் விசாரிப்பார்கள்... ஆனால் தவறு என் மேல். எனக்கு ஆயிரம் சொந்த வேலைகள் இருந்திருக்கலாம். வாங்குகிற சம்பளத்திற்கு நேர்மையாக உழைத்திருக்க வேண்டும். நானே செய்திருக்க வேண்டும். நீ போட்டுக் கொடுத்ததைச் சரிபார்த்திருக்க வேண்டும். ஸேட்ஜி என்னை மன்னித்தால் கூட நான் என்னை மன்னித்துக் கொள்ளத் தயாராக இல்லை. இந்தத் தப்புக்கு நான் முழுப் பொறுப்பு எனக் கூறிப் பதவி விலக அனுமதி கேட்டிருக்கிறேன். ஸேட்ஜி என்னைக் கூப்பிட்டு அனுப்பினார். பெரிய மனிதன். போனது போகட்டும் என்று சமாதானப்படுத்தித் தொடர்ந்து இருக்கும்படி என்னை வற்புறுத்தினார்.''

''எனக்கு ரொம்பவும் சிரமமாக இருக்கிறது ஸார். என்னால் உங்களுக்கு...''

''நடந்ததைப் புரட்டிப் பார்த்து பயன் இல்லை ரமேஷ். தர்மம், நியாயம் என்று இருக்கிறது இல்லையா? நான் பதவி விலகத் தீர்மானித்து விட்டேன். அப்புறம்! முக்கியமாக ஒன்று... எனக்குப் பதில் உன்னைப் போட்டுக் கொள்ளும்படி ஸேட்ஜியிடம் சிபாரிசு செய்திருக்கிறேன். அநேகமாக அவர் கேட்பார். உனக்கு அனுபவம் வரும் வரை நான் பக்கத்தில் இருந்து கவனிப்பதாக வாக்குக்கொடுத்திருக்கிறேன். இது கிடைத்தால் எச்சரிக்கையாக இரு. கவனமாக இரு... இந்த ராஜினாமாவை என்ன செய்யட்டும்? உன்னை என்ன கேட்பது? நானே கிழித்துப் போடுகிறேன்!'' என்றார்.




ரஞ்சனாவை ரயில் நிலையத்தில் இறக்கி விட்டதும் அவசரமாகப் புறப்பட்டாள் மாலினி. விரைந்து ஓடத் தொடங்கிய காரின் பின் இருக்கையில் சாய்ந்து உட்கார்ந்தவள் பெருமூச்சுவிட்டாள்.

கடந்த சில நாட்களில் எத்தகைய அனுபவங்கள்! கண்ணுக்குத் தெரியாத ஒரு எதிரியின் தாக்குதல்.... எந்த நேரத்திலும் எதிர்பாராத விதமாக எதிர்ப்படும் குறுக்கீடுகள்... இதோ இன்று ஒரு புதிய திட்டம்.... அதன் தொடர்பான ஒரு புதிய முயற்சி... இதில் ஏதும் குறுக்கீடு இருக்கப் போகிறதா?

யோசித்துக் கொண்டிருக்கும் போதே கார் கிறீச்சிட்டுக் குலுக்கலுடன் நின்றது. அதிர்ச்சியுடன் நிமிர்ந்தபோது, எதிரே அவள் காரை வழி மறித்தபடி போலீஸ் ஜீப்! அதிலிருந்து இறங்கி வந்த இன்ஸ்பெக்டர் முரளி அவள் பக்கம் நெருங்கிக் கதவின் வழியாக உள்ளே பார்த்தார். கேட்டார்.














கதவைத் திறந்து காரினுள் அவர் வந்த போது நகர்ந்து இடம்விட வேண்டியதாயிற்று.

அவனுள் பதற்றம். ரயில் இன்னும் சில நிமிடங்களுக்குள் புறப்பட்டு விடும். அது செங்கல்பட்டுக்குப் போய்ச் சேருவதற்குள் அவன் போய் விடவேண்டும். இல்லையெனில் ரஞ்சனா தவித்துப் போய் விடுவாள். இவரைச் சமாளித்து அனுப்பி விட்டு உடனே அவசரமாகப் போக வேண்டும். என்ன செய்வது? எப்படி இவரைத் தவிர்ப்பது?

எண்ணங்கள் விரைந்தன.

சாய்ந்து வசதியாக அமர்ந்த இன்ஸ்பெக்டர் முன்னே இருந்த டிரைவரிடம் சொன்னார்.

"வண்டியைக் கிளப்புமேன்!"









சினி சிப்ஸ்:

# கை கொடுத்தார் ராமராஜன்!



* ராஜ்கிரன்: இளையராஜா பக்தி...



* பெத்த மனசு: ராமராஜன் திடீர் டைரக்டர்!



* முராரி: பிரபலங்களின் ஆதரவு.

●● ஆபீஸ் பாய், ஃபிலிம் ரெப், டிஸ்ட்ரி பியூஷன் என்று கொஞ்சம் கொஞ்சமாகச் சினிமாத் துறையில் நகர்ந்து, சகல சூத்திரங் களையும் புரிந்து கொண்டு, இருபது ஆண்டு களுக்குப் பின்பு புரடியூசர் கம் நடிகராக உயர்ந்திருக்கிறார் ராஜ்கிரன். இவருடைய 'பெத்த மனசு' படத்தின் டைரக்டராகச் செந்தில்நாதனைப் போட்டு வேலைகள் எல்லாம் துவங்கி நடந்து கொண்டிருந்தன. ஷூட்டிங் கிளம்புவதற்கு முதல் நாள் 'பெத்த மனசு' டைரக்டர் ராமராஜன் என்று திடீரென்று அறிவிப்பு வருகிறது. இடையில் என்ன நடந்தது?

செந்தில் நாதனுக்கு மிகவும் நெருங்கிய நண்பர் நடிகர் அர்ஜுன். அர்ஜுன் நடிக் கும் படம் ஒன்றில் ஒப்பந்தமாகவே, கடைசி நேரத்தில் வந்து கையை விரித்திருக்கிறார் செந்தில்நாதன். ராஜ்கிரனுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. ராம ராஜனைப் போய் யோசனை கேட்க, அவர் வேறு இரண்டு டைரக்டர்களைச் சிபாரிசு செய்திருக்கிறார். இவருக்குப் பிடிக்க வில்லை. கடைசியில் ராமராஜனையே டைரக்ட் பண்ணச் சொல்லி சம்மதமும் வாங்கிவிட்டார். நடிப்பதற்கும் ராமராஜன் முப்பது நாட்கள் கால்ஷீட் கொடுத்திருக் கிறார். கூட ஒருவாரம் கால்ஷீட் வாங்கி னால் போயிற்று என்கிறார் ராஜ்கிரன்.

அது சரி ராஜ்கிரன் படங்களில் இளைய ராஜாவுக்கு ஏன் அவ்வளவு மரியாதை? (பக்தி!) ஆள் உயர மாலையும் பெரிய பெரிய கட் அவுட்களுமாக அமர்க்களப் படுகிறதே! ராஜ்கிரனிடமே கேட்ட போது, ''எனக்கு இளையராஜாவின் மீது ஒரு தொழில் தாண்டிய மரியாதை உண்டு. சினி மாக்காரர்களுக்கே உரிய எந்தக் கெட்ட பழக்கமோ, துளி பந்தாவோ இல்லாது, மற்ற எதிலும் கவனம் செலுத்தாது தம் தொழிலை மட்டுமே கவனிக்கிறாரே.... இப்படி வேறொரு சினிமாக்காரரைக் காட்டுங்கள் பார்க்கலாம்! அப்படிப்பட்ட ஒரு மனிதருக்கு மரியாதை செலுத்துவதில் தப்பில்லை,'' என்கிறார் ராஜ்கிரன்.

●● 'உன்னை நான் சந்தித்தேன்,' 'உயிரே உனக்காக....' ஆகிய படங்களுக்கு ஒளிப் பதிவாளராகப் பணியாற்றிய தினேஸ்பாபு கன்னடத்தில் தற்போது பெரிய டைரக்ட ராகிவிட்டார் — சுஹாசினியின் சிபாரிசில்! சுஹாசினியை ஹீரோயினாகப் போட்டு 'சுப்ரதா' என்ற படத்தினை டைரக்ட் செய்தார். படம் நல்ல ஹிட்! தற்போது ஓர் ஆங்கிலப் படத்தைத் தழுவி '48 மணிநேரம்' என்று ஒரு படம் எடுத்து முடித்திருக்கிறார். இந்தப் படத்தில் ரேவதி, மகாலட்சுமி நடித்திருக்கிறார்கள். தற் போது '48 மணிநேரம்' தமிழில் டப் செய் யப்பட்டு வெளிவர இருக்கிறது. இந்தப் படத்தினை 48 மணிநேரத்தில் எடுத்து முடித்திருக்கிறார்கள்!

●● உரிய நேரத்தில் வந்து பாடிவிட்டு அடுத்த ஃப்ளைட்டில் திரும்பிப் போகிற எஸ்.பி.பி. யும் ஜேசுதாஸும் ஒரு புது இசையமைப் பாளரின் மியூஸிக் கம்போஸிங் முழுவதும் இருந்து பாடிக் கொடுத்துவிட்டுப் போனார் கள். இளையராஜா உட்பட பல மியூஸிக் டைரக்டர்களிடம் பல வருடங்களாக உதவியாளராக இருந்து விட்டு, இன்று சுய மாக வளர்ந்து வரும் முராரி (முரளி)யை என்கரேஜ் பண்ணுவதற்காகத்தானாம்! முராரி 'சோலைக் குயில்' என்ற படத்திற்கு இசையமைத்திருக்கிறார்.

— எஸ். பாலு

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# வாலஸ் 100 ஆண்டு பாரம்பரிய சிறப்புடன் அறிமுகப்படுத்தும் சேமியா.



ஆங்கிலேயர் ஆட்சி
...ந்த காலத்தில், ரால் சாஹுப்
...ன்பவர் ஒரு சிறிய மாவுமில்
...ன்றை பம்பாயில் வாங்கினார்.
மாவுமில் ஒன்றை நடத்த
...வண்டும் என்கிற அவரது கனவு
...னவாகியது.
ஒவ்வொரு நாளும் பொழுது
...டிகையிலேயே, வயலிலிருந்து
...காதுமைகள் நேரடியாக மாட்டு
...ண்டிகளில் வந்திறங்கும்.
...காதுமையின் தரம் சிறப்பாக
...மைந்திடில் அவை
...ருப்பியனுப்பப்படும். கற்கள்,
...ண், தூசு மற்றும் கட்டைகளை
...க்குவதற்காக கோதுமை
...ருமுறை சுத்தம் செய்யப்படும்.
சுத்திகரிக்கப்பட்ட
...காதுமையிலிருந்து சுத்தமான
...வு தயாரிக்கப்படும். இவ்வாறு
...ல் சாஹுப் தனது கனவை
...னவாக்குவதில் மும்முரமாக
...டுபட்டார்.
தொடர்ந்து வரலாறு
...டைத்தார்.
இன்று, வாலஸ் ஆசியாவின்
...பெரும் மாவு மில்லாக
...ளர்ந்துள்ளது. நாட்டின்
...கச்சிறந்த பிஸ்கட்டுகளாகிய
...ார்லே-ஜி, மோனேகோ,
...ராக்ஜாக் யாவும் வாலஸ் மாவு
...காண்டே தயாரிக்கப்படுகின்றன.
வாலஸ் இத்தகைய தொழில்நுட்ப
...புணத்துவம் மற்றும் அறிவை
...ாலஸ் பாஸ்டா
...யாரிப்புகளுக்கென
...யன்படுத்தியுள்ளது: சேமியா,
...லுல்லஸ், மேக்ரோனி,
...பெகட்டி.

**வாலஸ் சேமியா.**

**பாரம்பரிய சிறப்பு வாய்ந்தது.**

வாலஸ் சேமியா மிகச் சிறந்த
...ரமுள்ள கோதுமை மாவிலிருந்து
...யாரானது.
வாலஸ் சேமியா கொண்டு
...வைமிக்க உணவுகள் பலவும்
...கள் தயாரிக்கலாம்:
...ற்றுண்டிகள், உணவுகள், இனிப்பு
...கைகள். இதோ அவற்றில் சில.

**வாலஸ் சேமியா பாயசம்**



தேவையான பொருள்கள்: 100 கிராம் வாலஸ் சேமியா; 1 லிட்டர் பால், 4 மேசைக் கரண்டி சர்க்கரை, வாசனைக்கு ஏலக்காய் மற்றும் ஜாதிக்காய், உலர்ந்த திராட்சை துண்டாக்கிய முந்திரிப் பருப்பு, ரோஜா இதழ்கள்/பச்சைக் கற்பூரம் சுவைக்கு (தேவையானால்).

செய்முறை: சேமியாவை வேகவைத்து நீரை வடிய வைக்கவும். பாலில் சர்க்கரை சேர்த்து நன்கு கெட்டியாகும் வரை காய்ச்சவும். வேகவைத்த சேமியா, ஏலக்காய், ஜாதிக்காய் இவற்றை சேர்க்கவும். ஒரு சிட்டிகை பச்சைக் கற்பூரத்தை வாசனைக்கு சேர்க்கவும். திராட்சை, முந்திரி, ரோஜா இதழ்கள் இவற்றை மேலாகத் தூவி அறையின் சீதோஷ்ண நிலையில் பரிமாறவும்.

**வாலஸ் சேமியா இட்லி**

தேவையான பொருள்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 40 கிராம் ரவை, 1-1/2 கோப்பை கடைந்த தயிர், தாளிப்பதற்கு 1 தேக்கரண்டி உளுத்தம் பருப்பு, 1 தேக்கரண்டி கடுகு, 1 தேக்கரண்டி துண்டாக்கிய இஞ்சி, நறுக்கிய பச்சை மிளகாய், 2 சன்னமாக நறுக்கிய கறிவேப்பிலை 1 கொத்து, 10 முந்திரிப் பருப்பு, மற்றும் 2 மேசைக் கரண்டி நெய்.



செய்முறை: சேமியாவை 5 நிமிடம்போல் வறுத்து தனியே வைக்கவும்.

நெய்யை சூடாக்கி, கடுகு, உளுத்தம் பருப்பு கறிவேப்பிலை இவற்றை வெடிக்க விடவும். முந்திரி, பச்சை மிளகாய், இஞ்சி இவற்றை சேர்த்து சிறிது வறுக்கவும். அதன்பின் ரவையை சேர்த்து வறுக்கவும்.

அடுப்பிலிருந்து இறக்கியபின் சேமியாவை சேர்க்கவும். தயிரை அதில் ஊற்றி, உப்பை சேர்த்து 5 நிமிடங்கள் அப்படியே வைக்கவும்.

அதன்பின் இட்லி தட்டுகளில் மாவை ஊற்றி 5 நிமிடங்கள் வேகவிடவும். ஆவிபறக்கும் இட்லியை தேங்காய் சட்னியுடன் பரிமாறவும்.

**வாலஸ் சேமியா உப்புமா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 3 மேசைக் கரண்டி எண்ணெய், 1/4 கோப்பை கடலைப் பருப்பு, 1/4 கோப்பை உளுத்தம் பருப்பு, 2 வெங்காயம் நறுக்கியது, 1 தேக்கரண்டி கடுகு,



நறுக்கிய பச்சை மிளகாய் 4, 2 தேக்கரண்டி சர்க்கரை, 1 கொத்து கறிவேப்பிலை, 2 கோப்பை நீர், தேவைக்கேற்ப உப்பு, மிளகு மற்றும் மிளகாய்ப் பொடி, அலங்கரிக்க கொத்துமல்லி.

செய்முறை: சேமியாவை எண்ணெயில் சிறிது சிவக்கும் வரை வறுத்து தனியே வைக்கவும்.

கடுகு மற்றும் பருப்புகளை எண்ணெயில் தாளித்து நன்கு கிளறவும். வெங்காயம் மற்றும் இதர பொருட்களையும் சேர்த்து வதக்கவும்.

2 கோப்பை நீரை விட்டு வறுத்த சேமியாவைப் போடவும். நன்கு வேகும்வரை மூடி வைக்கவும். அலங்கரித்து பரிமாறவும். ஆவிபறக்கும் உப்புமா தயார்.

**வாலஸ் எலுமிச்சம்பழ சேமியா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 1 சிறிய தக்காளி



நறுக்கியது, 2 எலுமிச்சம்பழத்தை பிழிந்து கொள்ளவும். கொத்துமல்லி தழை சிறிது. தாளிப்பதற்கு: 1 தேக்கரண்டி உளுத்தம் பருப்பு, 1 சிறிய இஞ்சித் துண்டு நறுக்கியது, பச்சை மிளகாய் 2 நறுக்கியது, சிறிது கறிவேப்பிலை.

செய்முறை: சேமியாவை நெய்யிலே 2 நிமிடங்களுக்கு வறுக்கவும்.

கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய், இஞ்சி இவற்றை எண்ணெயில் தாளிக்கவும். 2 கோப்பை நீரை சேர்த்து கொதிக்க விடவும். உப்பு போடவும்.

வறுத்த சேமியாவைப் போட்டு சில நிமிடங்களுக்கு மூடி வைக்கவும். அதன்பின் எலுமிச்சை சாறையும் தக்காளியையும் சேர்க்கவும். கொத்துமல்லியால் அலங்கரிக்கவும்.

**வாலஸ் தயிர் சேமியா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 1 தேக்கரண்டி கடுகு, 1 மேசைக் கரண்டி உளுத்தம் பருப்பு, 2 நறுக்கிய பச்சை மிளகாய், சிறிய இஞ்சித் துண்டு நறுக்கியது, கறிவேப்பிலை, 1 மிளகாய் வற்றல், பெருங்காயம், வெள்ளரித் துண்டங்கள், நறுக்கின குடமிளகாய், கொத்துமல்லி இவற்றுடன் கடைந்த தயிர்.

செய்முறை: கொதிக்கும் நீரில் சேமியாவை உப்பு சேர்த்து 5 நிமிடங்கள் வேக விடவும்.



சேமியா வேகும்போதே மற்றொரு இலுப்பச் சட்டியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய், மிளகாய் வற்றல், பெருங்காயம் இவற்றை முறையே தாளிக்கவும்.

வெந்த சேமியாவை இலுப்பச் சட்டியில் கொட்டியபின் கியாஸை அணைத்து விடவும்.

ஆறியபின் தயிரை சேர்க்கவும்.



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

"சிகப்பழகுச் சித்திரமே கல்பனா, சிறகடிக்கும் மோகனப் பொற்கனா!"

# கல்பனாவின் மேனியழகு எழிலோவியமாச்சு! ஒளிசுடர வைத்தது ஃபேர் அண்ட் லவ்லி.

"ஆச்சா!" கிறுகிறுக்கிறாள் கல்பனா. பொற்சிலைதான் பேசுதோ என மலைக்கிறான் அருண், வண்ண மயில் பதிந்த வண்டுக் கண்கள் கொட்டாமலே. செப்பிடு வித்தை இது ஃபேர் அண்ட் லவ்லியின் ஒப்பில்லாக் கைவண்ணம். இரண்டே மாதங்களில் இதமாகப் பூத்தது இயல்பான சிகப்பழகு. நங்கையின் மேனியிலே நல்லொளி சுடர, பெற்ற நிறப் பொலிவை இவ் வண்ணமே பேணிக் காக்க — கல்பனா என்றும் வேளைதவறாமல் இட்டு வருகிறாள் ஃபேர் அண்ட் லவ்லி. இனி, இயற்கைக் காட்சிகள் அல்ல, எழிலரசி கல்பனா தான் ஓவியன் அருணுக்கு வண்ணக் கற்பனை உலகமே.

கல்பனாவைப் போலவே நீங்களும் கவனிக்கத்தக்க சிகப்பழகை அடைந்திடலாம் — ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்

ஃபார்முலா — இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல் கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது — வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை. மற்றொன்று: இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி — நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

உபயோக முறை:

கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

எளிதில் உள் உறிஞ்சப்படும் குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது. உடலார உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினால் எழுதுங்கள் இம் முகவரிக்கு:
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி ஆலோசகர், பி.ஓ. பாக்ஸ் 758,
பம்பாய்-400 021.

**ஃபேர் அண்ட் லவ்லி**
சிகப்பழகு க்ரீம்




**கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்**